# அழகு சொட்டும் தொட்டுணர்வு

# ஹேஸ்லீன் ஸ்னோ



தலைசிறந்த அழகு
சாதன ஸ்னோவான
ஹேஸ்லீன், உங்கள்
மாந்தளிர் மேனிக்கு
மென்மையப் பராமரிப்பு
வழங்குகிறது.
லேசாகவும் மிருதுவா-
கவும் விளங்கும்
ஹேஸ்லீன் ஸ்னோ,
சீராகப் பரவி, உங்கள்
மேனியைப் பாதுகாத்து,
சருமத்தை நன்கு
பராமரிக்கிறது.
உங்கள் மேனி குற்றங்
குறையின்றி முற்றும்
இளமையுடன் வனப்-
பொங்கி விளங்க,
நித்தமும் உபயோகி
யுங்கள் இதை.
இளமையான இயற்கை
எழிலின் இரகசியம்,
ஹேஸ்லீன் ஸ்னோ.




SHB-8295 TM

(ஸ்தாபிதம்: 1947)

# பாலுசேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுசேரி பில்டிங்ஸ்", 3, சிங்காராச்சாரி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

தந்தி: 'EVERMANS', போன்: 85834 • தபால்பெட்டி: 414

மதராஸ் சிட் பண்டு 1961 ஆக்ட்படி கீழ்க்காணும் சீட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 OF 1961)

**நீண்டகாலச் சீட்டுகள்**

**50 மாதங்கள்** **50 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTM | ரூ. 200/- | ரூ. 10,000/- |
| LTN | ரூ. 100/- | ரூ. 5,000/- |
| LTO | ரூ. 50/- | ரூ. 2,500/- |
| LTP | ரூ. 20/- | ரூ. 1,000/- |

**40 மாதங்கள்** **40 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500/- | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | ரூ. 5,000/- |

**குறுகிய காலச் சீட்டுகள்**

**25 மாதங்கள்** **25 அங்கத்தினர்கள்**

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | ரூ. 5,000/- | D | ரூ. 25/- | ரூ. 625/- |
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |

**சேரும் குருப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்**

**கிளைகள்: புது டில்லி — பம்பாய் — பெங்களூர் — கல்கத்தா**

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# துளிகள் சில செய்கின்ற மாயம்
# தூய்மை பளிச்சிடும் வெண்மை மயம்!

கடைசி அலசலுக்கு முன், நீரில் 10—15 துளிகள் மாக்ஸிம் கலக்கவும். அதில் துணிகளை 15 நிமிடம் ஊறவைக்கவும். பிறகு பிழியாமல் அப்படியே உலரவிடவும்.

மாக்ஸிம் உபயோகிப்பதினால், ஒரே ஒரு காசு செலவில், நான்கு சட்டைகள் அல்லது இரண்டு சேலைகள் பனிபோல் வெண்மை பெறுகின்றன.

ULKA-GMH-7 TAM




'டெரின்', 'டெரிக்காட்டன்', நைலான் மற்றும் காட்டன் போன்ற எல்லா துணிகளுக்கும் பளிச்சிடும் வெண்மை அளிக்கும் புதிய அதிக ஒயிட்டனர்.

**மாக்ஸிம்**

இந்தியாவில் ஜெ.ப்ரே மானர்ஸ் அண்ட கம்பெனி லிமிடெட்டால் தயாரிக்கப்படுகிறது.

# வயிற்றுக் கோளாறு?



வாயுவா?
அமில உபாதையா?
நெஞ்செரிச்சலா?
அஜீரணமா?



## 2 ரென்னி மாத்திரைகளை மெல்லுங்கள்... விரைவிலேயே நிவாரணம் பெற




நிக்கோலஸ் Ⓝ தயாரிப்பு

mcm/ni/4 tam

டாக்டர், நீங்கள் சொன்னது முற்றிலும் உண்மை.
இப்போதெல்லாம் எங்கள் குடும்பத்தில்
அனைவரும் மிகுந்த சுறுசுறுப்புடன் இருக்கின்றனர்...

# 'ஆம் ஜானகி, எனக்குத் தெரிந்த ஆரோக்கியமுள்ள குடும்பங்களில் அனைவரும் 'ஹார்லிக்ஸ்' பருகுகின்றனர். ஊட்டத்தின் முக்கிய. ஆதாரமே அதுதான்'

என்கிறார் ஜானகியின் டாக்டர்.

அவர் 'ஹார்லிக்ஸ்' தரும் சிறந்த ஊட்டத்தின் குணங்களைப்பற்றி நன்கு அறிந்தவர். ஜீவாதாரமான புரதம் மற்றும் பால், கோதுமை, மால்டெட் பார்லி, இவை தரும் ஊட்டச் சிறப்பும் இயற்கைச் சத்துக்களும் அடங்கியதால் 'ஹார்லிக்ஸ்' நிகரற்று விளங்குகிறது. உதாரணமாக, பாலிலிருக்கும் ஊட்டச் சத்தை இருமடங்காகப் பெருக்குகிறது 'ஹார்லிக்ஸ்'.

குடும்பத்தினரின் ஆரோக்கியத்தைப் பொறுத்த வரையில் மிகச் 'சிறந்ததென கருதப்படுவது 'ஹார்லிக்ஸ்' தான்.

'ஹார்லிக்ஸ்'—ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்.

## முழுமையான ஊட்டம் பெற—'ஹார்லிக்ஸ்'



ஹார்லிக்ஸ்'—ஒரு பதிவு பெற்ற ட்ரேட் மார்க்

தாய்மார்களின் ஏகோபித்த தீர்ப்பு.......
இது ஒரு குடும்ப சித்திரம்!
பொது மக்களின் ஒருமித்த கருத்து......
இது ஒரு பொழுதுபோக்கு படம்!





சாந்தி

புவனேஸ்வரி

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அளிக்கும்
அருண் பிரசாத் மூவிஸ்

# பட்டிக்காடா பட்டணமா

டைரக்ஷன்: P. மாதவன் B.A.,

கண்ணதாசன்

P.N. சுந்தரம்

இது ஒரு

# பாரதத்திலிருந்து பங்களாதேஷுக்கு!

# சங்கர் சிமெண்ட்

## போரினால் உருக்குலைந்த நாட்டைப் புதுப்பிக்கச் செல்கிறது

1968-69ம் ஆண்டில் ஏற்றுமதிக்கென இந்தியா சிமெண்ட்ஸ் அண்மையில் இந்திய அரசிடமிருந்து பாராட்டு இதழ் பெற்றுள்ளது. இந்த ஏற்றுமதி இன்னும் தொடர்கிறது...

சங்கர் சிமெண்ட் ஏற்றுமதியில் இப்போது ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டுள்ளது. புது நாடு ஒன்றை நிர்மாணிக்க, அந்நாட்டு மக்களுக்கு மறுவாழ்வு அளிக்க, போரினால் சீர்குலைந்த தொழில்களையும் பொருளாதாரத்தையும் செம்மைப்படுத்த அது செல்கிறது. 20,000 டன் சங்கர் சிமெண்ட் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளது ... இன்னும் நிறைய ஏற்றுமதி செய்யப்படும்.




**இந்தியா சிமெண்ட்ஸ் லிமிடெட்**

175/1, மவுண்ட் ரோட்,
சென்னை-2

தொழிற்சாலைகள்:
சங்கர் நகர், திருநெல்வேலி மாவட்டம்
சங்கரி, சேலம் மாவட்டம்

FDSIC-1773TMA

மனதிற்குகந்த
தூய வெண்மையைப் பெற

# ஓ ஓ பி நீலம்




ஓ ஓ பி நீலம் உடனடியாக முற்றிலும் கரைந்துவிடும் வெள்ளைத் துணிகள் ஒரே சீராக பால்போல் பளிச்சிடுகின்றன. உங்கள் சட்டைகள், புடவைகள், பெட்ஷீட்டுகள் மற்ற துணிகள் எதையும் வெள்ளை வெளேர் என்று ஆக்க மிகவும் சிக்கனமான வழி இது. நீலப்புள்ளி விழாது, மஞ்சள் திட்டு தெரியாது.

ஓ ஓ பி நீலம் மேற்கு ஜெர்மன் கூட்டுறவுத் தயாரிப்பு. இந்தியாவின் மிக நவீன அல்டிராமரைன் தொழிற்சாலையில் உருவானது.



தயாரிப்பாளர்:
அல்டிராமரைன் & பிக்மென்ட்ஸ்
லிமிடெட், அம்பத்தூர், சென்னை 53

UPL/6544

# கல்கி



## பொருளடக்கம்



பரிதாபி வைகாசி, 15 — மே 28 1972



"கல்கி" யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

கல்கி மலர் 31 இதழ் 44



தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
-- பாரதியார்

# முனிவர்களில் முதல்வர்

**கா**லம் வகுக்கவொண்ணாத் தொன்மையிலிருந்து இன்றுவரை பாரத மண்ணிலே ஞானமும் யோகமும் பக்தியும் தர்மமும் வைதிகமும் அருளும் இயைந்த ஆத்மிக கங்கை வற்றாத ஜீவ நதியாகப் பாய்ந்து கொண்டேயிருக்கிறது. கலியின் களிக்கூத்தாட்டத்திடையே இன்றும் எத்தனையோ தபஸ்விகளும் ஞானிகளும் பக்தசிகாமணிகளும் இந்நாட்டைப் புனிதப்படுத்தி வருகிறார்கள். அவர்களுக்குள் ஒப்புவமை பார்ப்பதும், அவர்களை வரிசைப்படுத்துவதும் பொருளற்ற காரியமே. ஆயினும் இன்று நம் நாட்டில் மகான், தபஸ்வி, ஞானி, அருளாளர், முனிவர், வேத சமயக் காவலர் என்றெல்லாம் கூறிய மாத்திரத்தில் கோடானு கோடி மாந்தரின் மனக்கண்ணில் முதற்கண் பிரகாசிப்பவர் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவர் அவர்களே. நம் தேசத்தில் மட்டுமல்ல; வெளி நாடுகளிலும் கூட பாரத தேச முனிவர் பரம்பரையில் ஸ்ரீ காமகோடி பெரியவாளுக்கே முதலிடம் தந்து வணங்குகிறார்கள். அவர் எந்தக் காட்டிலே, மலையிலே, பட்டிக்காட்டிலே இருந்தாலும் அங்கு பக்தர்கள் திரண்டு அவரது திருவடி பணிந்து வருகிறார்கள்.

மகான்கள் வரிசையில் இவ்விதமாக நமது பெரியவாள் 'புலிக்குளே முதன்மையுற்றிருப்பது' சிறிது புதிராகவும்கூடத் தோன்றலாம். மகா புருஷர்களுக்குள் ஸ்ரீ பெரியவாளைப் போல சாஸ்திரக் கட்டுப்பாடுகளைப் பூரணமாகவும் கண்டிப்பாகவும் விதித்துக் கொண்டிருப்பவர் வேறெவரும் இல்லை எனலாம். இது காரணமாக அவரை நாடி வருபவர்களும் பல விதிகளுக்குக் கட்டுப்படத்தான் வேண்டியிருக்கிறது. இன்றைய உலகமோ கட்டுப்பாடே இல்லாத சுயேச்சையைத்தான் போற்றி வளர்த்து வருகிறது. அப்படியிருந்தும், காஞ்சிப் பெரியவர்களை உலகம் தேடி வருகிறது; ஏனோ அவரைக் கண்ட மாத்திரத்தில், அந்தச் சிறிது நேரமாவது உள்ளம் கனிந்து உருகுகிறது; தானாகவே அவரது சந்நிதியில் தன் சிறுமையை உணர்ந்து விழுந்து கும்பிடுகிறது. அவர் கருணா சமுத்திரம் என்பது உண்மை. ஆயினும் அந்தக் கருணையைக் கூடப் பரிமளிக்கத் தெரியுமாறு வெளிப்படுத்திக் காட்ட மாட்டார். மனம்விட்டுப் பேசுவது போலவே இருப்பார் எனினும், தமது உள் நெகிழ்ச்சியை நம்மிடம் காட்டாமல், ஒளித்தே வைப்பார். இவ்விதமிருந்தும் கூட, பரவச உணர்ச்சிக்கும், படாடோபப் பேச்சுக்கும் முக்கியத்துவம் தருகிற இன்றைய உலகம் இந்த மகனீயரிடம் ஒரு தனித்த மதிப்பும் பக்தியும் நம்பிக்கையும் கொண்டிருக்கிறது! 'எவன் ராமனைப் பார்க்கவில்லையோ, எவனை ராமன் பார்க்கவில்லையோ அவன் தன் பிறவியையே இகழ்ந்து கொள்வான்' என்று ஸ்ரீமத் ராமாயணம் கூறும். இன்றும், பெரியவாள் விதிக்கும் வைதிக ஆசாரணைகளில் ஈடுபாடு அற்றவர் உட்பட எண்ணிறந்த மக்கள் ஒரு முறையேனும் அந்த மகானின் திருஷ்டிக்கு ஆளாக வேண்டும் என்ற தாபத்துடன் அவரைத் தேடி ஓடி வருவதைப் பார்க்கிறோம். அதிசயித்து வியக்கும்படியான அற்புதம் எதுவும் அவர் செய்யவில்லை. எளிமையிலும் எளிமையாக விளங்குகிறார். ஆனபோதிலும் அவரிடம் வந்தாலே தாற்காலிகமாகவேனும் தங்கள் குறை தீருகிற அற்புதத்தை உணர்ந்து பக்த கோடிகள் அவரை மொய்த்த வண்ணம் இருக்கிறார்கள்.

இந்தப் புதிரை அவிழ்ப்பது நமக்குக் கடினமான காரியம்தான். ஆனால் தெய்வப் புலவர் திருவள்ளுவர் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே புதிரை அவிழ்த்து வைத்து விட்டார்.

**தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய**
**மன்னுயிர் எல்லாம் தொழும்**

உலகியல் நோக்கில் தனது என்று எதுவுமே இன்றி, சுயநலத்தை அறவே கரைத்து, உண்மையான 'தான்' எதுவோ அதைப் பெற்று, தன் உயிருக்கு உயிரான ஏகத்தில் நிலைத்து நின்றவரை, அதே ஏக உயிரிலிருந்து எழுந்த மற்ற உயிரினமனைத்தும் தானாகவே வணங்கித்

# திரிசூலம் திருக்குடமுழுக்கு

சென்னை பல்லாவரத்தை அடுத்து நான்கு மலைகளுக்கு நடுவே நெஞ்சை அள்ளும் சூழலில் அமைந்துள்ளது புண்ணியப் பதியான திரிசூலம். நான்கு மறைகளுக்கும் உட்பொருளாக இலங்கும் சிவபெருமான், இங்கு நான்கு மலைகளுக்கு உள்ளே கோயில் கொண்டிருப்பதால், இந்த க்ஷேத்திரத்துக்கு ஆதியில் 'சதுர்வேதி மங்கலம்' என்றே பெயர் இருந்து வந்தது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட புராதன ஆலயம். சோழர்கள் திருப்பணி செய்த திருக்கோயில். திரிசூல நாதரது சக்தியான தேவி ஸ்ரீ திரிபுரசுந்தரியின் அநுக்கிரக மயமான திவ்விய வடிவம் கண்டவர் மனத்தைவிட்டு நீங்காது. ஸ்ரீ வி. டி. சுவாமி அவர்களின் தலைமையில் அமைந்த ஆஸ்திகர் குழுவின் அரும்பெரும் முயற்சியால் இந்த மகாக்ஷேத்திரத்தில் ஜூன் முதல் தேதி காலை 7–30க்கு மேல் 8–30க்குள் மகா கும்பாபிஷேகம் நடக்கிறது. அன்பர்கள் கலந்து கொள்வதோடு அடியிற் காணும் முகவரிக்குப் பொருள் அனுப்பி உதவவேணும். ஸ்ரீ டி. ஜே. மணி, கூட்டுக் காரியதரிசி, திரிசூலம் திருப்பணிக் குழு, 13, சிவஞானம் தெரு, தி. நகர், சென்னை — 17.

தான் தீரும். கடலை நோக்கி ஆறுகள் தாமாகப் பாய்வது போல், பிரம்ம ஞானியை நோக்கி மக்கட் குலம் தானாகவே ஓடத்தான் செய்யும். எத்தனையோ விதமான மோகமெனும் மேகப் படலங்களில் நம்மை நாமே மூடி மறைத்துக் கொண்ட போதிலும் உள்ளே அணையாமல் இருக்கும் ஆன்மச் சுடர், அந்தச் சுடரை அனவரதமும் அநுபவித்துக் கொண்டிருக்கும் ஆத்ம ஞானியின்பால் தானாக நம்மைக் கொண்டு தள்ளுகிறது. பிரம்மத்திலேயே நிலைத்த ஜீவன் முக்தர்களான பெரியவாளிடம் மக்கள் யாவரும் ஈர்க்கப்படுவதன் இரகசியம் இதுவே.

காரிய காரணமற்ற பிரம்மத்தில் நிலைத்திருந்தாலும், அவர் செய்துள்ள அவதார காரியமோ அதிசயமானது. இன்று இத்தனை கும்பாபிஷேகங்கள் நடப்பதற்கும், பேட்டைக்குப் பேட்டை பஜனை மண்டலிகளும் பிரவசனங்களும் செழிப்பதற்கும், இந்த அளவுக்காவது வேத கோஷமும், ஆசார நெறிகளும் காணப்படுவதற்கும் மூலநிதி நம் பெரியவாளே அல்லவா? பெரியவாள் அடக்கத்தின் உருவமாக இருப்பது போலவே, அவரது அவதாரப் பணியும் அடங்கியே பொலிகிறது. ஒருவர் புதிதாக ஒரு விதையை ஊன்றினால், பிறகு 'இது இவர் வைத்த செடி' என்று ஸ்தூலமாக வெளிக் காட்டலாம். ஆனால் இன்னொருவர் புராதனமான ஓர் ஆலவிருட்சம் பட்டுப் போய்க் கொண்டிருக்கும்போது அதன் விழுதுகளைக் காத்துத் தந்தால் அந்தப் பணியை இவ்வளவு பிரகாசமாகச் சுட்டிக்காட்ட முடியாது. பெரியவாள் புதிதாக ஏதேனும் ஒரு மார்க்கத்தை ஸ்தாபித்திருந்தால் அதன் வளர்ச்சியைப் பளிச்சிட்டுக் காட்டக் கூடும். ஆனால் அவர்கள் புதிதாக ஏதும் செய்யவில்லை; தொன்மையிலும் தொன்மையான வேத விருட்சம் பட்டுப்போய் அடியோடு சாய இருந்த சமயத்தில், அதன் சில விழுதுகளையேனும் காத்துத் தரவே வந்தவர் அவர். அவர் என்ன செய்தார் என்று ஸ்தூலமாகப் பார்க்க முயல்வதைவிட, அவர் தோன்றியிராவிடில் என்ன நேர்ந்திருக்கும் என்று சிந்தித்தாலே அவரது அவதாரப் பணியின் மகிமை புரியும். இன்றைக்கு எழுபத்தெட்டு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு வைகாசி அநுஷத்தன்று சநாதன வேத தர்மமானது, நமது பெரியவாள் என்ற திவ்விய வடிவத்தைத் தாங்கி உலகுக்கு வந்திராவிடில், இன்று பாரத தேசத்தில் வேத சமயமே இருந்திராமற் போயிருக்கக் கூடும். உரிமட்டை நாரில் உள்ள ஓரிரு பொறிகளைத் தாம் ஊதிக் கொண்டிருப்பதாக அவர்களே சொல்வது வழக்கம். அவர்களுக்கு அதனால் ஆக வேண்டியது ஒன்றும் இல்லை. நம் பொருட்டுத்தான் ஊதுகிறார்கள். ஜயந்தி, விழா, தோத்திரம் எல்லாம் செய்கிற நாமும், இவற்றைவிட முக்கியமாக வேத தர்மப் பொறிகளை மேலும் மேலும் ஊதி ஜோதிப் பிழம்பாக்க வேண்டும். அதுவே உண்மையில் ஜகஜ்ஜோதியான பெரியவாளின் ஜயந்தி நன்னாளாகும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

இந்தியாவில் பல பெயர்களில் கம்யூனிஸ்ட் கட்சிகள் இயங்கி வருகின்றன. பெயர் யாதாயினும் இக்கட்சிகள் அனைத்துமே ஜன நாயகத்துக்கு ஆபத்து விளைவிப்பவை என்பதே என் முடிவான கருத்து. இந்திய – சோவியத் உடன்படிக்கையின் காரணமாக ஏற்பட்டுள்ள சூழ்நிலையை இக்கட்சிகள் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு அச்சகங்கள் தொடங்கியும், சொந்தக் கட்டடங்களுக்கு அஸ்திவாரங்கள் போட்டும் வருகின்றன. இந்தப் போக்கைக் கண்டு நான் மகிழ்ச்சியடையவில்லை. ஜனநாயகப் பிரியர்கள் யாவரும் எச்சரிக்கை பெற வேண்டும்; ஆபத்தை வளர விடுவதற்கு அவர்கள் உதவி தந்து ஏமாந்து போகக் கூடாது.

★

வியட்நாமில் அதிதீவிர நடவடிக்கை எடுத்த போதிலும் ஜனாதிபதி நிக்ஸன் மாஸ்கோவுக்குத் தமது உத்தேசப்படியே விஜயம் செய்கிறார். இந்த விஜயத்தினால் எந்தப் பலனும் விளையாமற் போகலாம்; அல்லது மிக முக்கியமான விளைவு ஏதேனும் ஏற்படவும் செய்யலாம். இரண்டாவதாகச் சொன்னதற்கே பிரார்த்திப்போமாக. விஷக் கிருமிகளைப் பரப்பும் போர் முறையைக் கைவிடுவதற்கு உடன்படிக்கை பிறந்தது போலவே, அணு ஆயுத உற்பத்திக்கும் முடிவு ஏற்பட மகத்தான உபாயம் காணப்படலாம் என்று நம்புவோமாக. இவ்விதம் நிகழ்ந்தால், ஜனாதிபதி நிக்ஸனின் பெயர் சரித்திரத்தில் பொன்னெழுத்தில் பொறிக்கப்படும்.

★

தென் வியட்நாமின் மீது ஹனோயின் ஆக்கிரமிப்பு தளராமல் நீடிக்கிறது. ஹனோயை எதிர்த்து ஸ்ரீ நிக்ஸன் எடுக்கும் நடவடிக்கைகள் நியாயமானவை என்று பிரிட்டன் உணர்ந்திருக்கிறது. இது மகிழ்ச்சிக்குரிய விஷயம். இந்திய சர்க்காரோ, கண்டனத்துக்குரிய ஹனோயைவிட்டு, தென்வியட்நாமுக்குக் கொடுத்த வாக்கைக் காத்து வரும் அமெரிக்காவையே கண்டித்து வருகிறது.

இந்திய சர்க்கார் வட வியட்நாம் அரசாங்கத்தின் மீது தனக்குள்ள செல்வாக்கைக் கொண்டு அதன் ஆக்கிரமிப்பைக் கட்டுப்படுத்தி, இருதரப்பினரும் விரைவில் பேச்சுவார்த்தைக்கு வர வழி செய்ய வேண்டும் என்று பிரிட்டிஷ் சர்க்கார் கேட்டுக் கொண்டிருக்கிறது. இந்திய ஹை கமிஷனர் மூலம் இந்தக் கோரிக்கை பிரிட்டனால் அனுப்பப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. அந்த மட்டில் நல்ல சேதியே!

## மகாவித்வான் மறைவு

கர்நாடக சங்கீதத்தின் தூய்மையைக் காத்து இதயத்துக்கு நல்விருந்தாக வயலின் இசை அளித்து வந்த விற்பன்னர் ஸ்ரீ பாப்பா வேங்கடராமய்யா அவர்கள் இறைவனடி ஏகிவிட்டார்கள். அது ஓர் இசைக் குடும்பம். ரத்தத்தில் ஊறிய சுத்த சங்கீதத்தை, மகா வித்வான்களிடம் சிட்சை பெற்று விருத்தி செய்து கொண்டார் ஸ்ரீ பாப்பா. மலைக்கோட்டை கோவிந்தசாமிப் பிள்ளை என்ற மகா மேதையிடம் நாத வித்தையின் நுட்பங்களையும் வயலின் வாத்தியத்தின் சூட்சமங்களையும் கசடறக் கற்றுத் தமதாக்கிக் கொண்டார். நாதவித்தகி தனம்மாளையும் குரு ஸ்தானத்தில் வகித்த ஸ்ரீ பாப்பாவின் வாத்தியத்தில் மரபுக்கு முரணான சிறு சாயலும் வீசாது. கௌரவமாக, கம்பீரமாக நாதத்தைக் காத்து நிறைவு தந்தார் ஸ்ரீ பாப்பா. பக்க வாத்தியமாகவும் வயலின் வாசித்துப் பிரபல வித்துவான்களுக்குப் பக்கபலம் தந்தார். பழகுவதற்கு இனிய பண்பாளர் அவர். ஸ்ரீ பாப்பா அவர்கள் அமரருலகில் இடம் பெற்றுவிட்டார். நமது இசை உலகத்தில் நாம் பூர்த்தி செய்யவொண்ணாத ஒரு காலி ஸ்தானம் ஏற்பட்டுவிட்டது. ஸ்ரீ பாப்பா அவர்களின் இல்லத்தினருக்கு, குறிப்பாக, இசையுலகில் முன்னணி கண்டு வரும் அவரது புதல்வர்களான ஸ்ரீ தியாகராஜனுக்கும் ஸ்ரீ நாகராஜனுக்கும் நமது மனமார்ந்த அநுதாபங்களை அளிக்கிறோம்.





பட்டாடைகளைப் பத்திரமாக சலவை செய்திட

# ஜெண்டீல்

பட்டுகள் மற்றும் 'டெரீன்', நைலான், ரேயான் போன்ற செயற்கை இழைத் துணிகள் மென்மையானவை. அவற்றைப் பத்திரமாக சலவை செய்ய விசேஷ கவனம் தேவை. அதை ஜெண்டீல் மட்டுமே செய்ய வல்லது. உங்களுடைய விலையுயர்ந்த மென்மையான புடவைகள், பெண்களின் உள்ளாடைகள், சட்டைகள், கழுத்துக் குட்டைகள், நெக்டைகள் ஆகியவற்றின் நெசவையும் பளபளப்பையும் பாழாக்காதீர்கள். அவற்றை வீட்டிலேயே கெடாமல் சலவை செய்கிறது ஜெண்டீல்.

உங்கள் மென்மையான துணிகளை சலவை செய்யவே விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது ஜெண்டீல். அதாவது பட்டாடைகள், செயற்கை இழைத் துணிகள், கம்பளித் துணிகள், எதுவாயினும் சரி. ஜெண்டீல் மிகவும் சுத்தமாக சலவை செய்து... அழுக்கை அகற்றி—துணிகளைப் பட்டுப்போல், புதுமையுடன், பளபளப்பாக விளங்கச் செய்கிறது.




**ஜெண்டீல்—மென்மையான துணிகளை**
**மனையிலேயே பத்திரமாக சலவை செய்யும் சாதனம்**

Shilpi HPMA 54A Tam



# பிரத்தியட்ச தெய்வம்

டாக்டர் டி. எம். பி. மகாதேவன்

விந்தைதான், அநாதி வஸ்துவுக்குப் பிறந்த நாள் என்று 1894ம் ஆண்டு மே 28ந் தேதியைக் குறிப்பிடுகிறோம். காலம் கடந்த பொருளுக்கு இப்போது 78 ஆண்டுகள் முடிவுற்றதாகக் கூறுகிறோம்!

ஸ்வாமிநாதன் என்ற பெயரில் நிகழ்ந்த இந்தத் தெய்விக அவதாரத்தை வரவேற்கும் பாக்கியம் விழுப்புரத்துக்குக் கிடைத்தது. ஜகத் — குரு என்ற விருதைத் தாங்கி, கீழ் நாட்டு மேல்நாட்டு நாகரிக மனப்பான்மையினர் பலப் பலருக்கு ரட்சணம் தரப் போகிற குழந்தை முதலில் சாமானிய உலகியல் கல்வி முறைக்கே கட்டுப்பட்டது. ஸ்ரீ காமகோடி பீடத்தின் 66-வது ஆசாரியரான ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி அவர்களின் மந்திர ஸ்பரிசம் பட்டதும் ஸ்வாமிநாதனின் உள் மகிமை — இதுவே மெய்ப்பொருள் என்ற மகிமை — மனித குலத்தை உத்தாரணம் செய்ய ஆதி மகா சங்கரரே மீண்டும் வந்திருக்கும் மகிமை — வெளிப்பட்டது!

1906ம் ஆண்டில் காமகோடி பீடத்தின் 66-வது ஆசாரியர் ஸ்வாமிநாதனைக் கண்ட மாத்திரத்தில், பாலருக வேஷமிட்டு வந்துள்ள தேஜோமயம் யாது என உணர்ந்து, இந்தப் பிள்ளையே தமக்குப் பின் பீடாதிபதிகள் என மனத்தில் நிர்ணயித்துவிட்டார். அதன் பின் அற்புதமான விதத்தில் நிகழ்ச்சிகள் உருவாகி — நம்மால் விளக்கவொண்ணாத சம்பவக் கோவையை அற்புதம் என்றுதானே கூற வேண்டும்? — 1907 பிப்ரவரி 13ந் தேதியன்று பாலன் ஸ்வாமிநாதன், பரம புனித காமகோடி பீடத்தின் 68-வது ஆசாரியராக ஆரோகணித்துவிட்டார். மிகவும் பொருத்தமாக இவருக்கும் பரமகுருவான ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதியின் திவ்விய நாமமே சந்நியாசப் பெயராக அமைந்தது.

அதன்பின் நம் பெரியவாளின் வாழ்க்கை வரலாறு என்பது, நமது தேசத்தின் — குறிப்பாக தக்ஷிண பாரதத்தின் — ஆத்மிக சரித்திரமாகவே விரிந்தது. அது குறிப்பிட்ட ஓர் எல்லைக்குள் அமைந்த பணியைச் செய்கிற ஒரு தனிக் குருவின் சரிதையல்ல. அது சங்கர தத்துவம் என்கிற மகா சத்தியமானது, பெருகிக் கொண்டே வரும் நானாவிதமான சாதகர் கூட்டத்தினருக்கு நானாவிதத்தில் ஆத்மிக அநுக்கிரகம் செய்த அற்புத சரிதமாகும்; தனியார் வாழ்விலும் சமுதாய வாழ்விலும் விவேகமும் புனிதமும் வித்தூன்றுவதற்காக சங்கர தத்துவம் செயல்பட்ட சரிதமே பெரியவாளின் வரலாறு.

1919லிருந்து 1939 வரை ஸ்ரீ பெரியவாள் நம் தேசத்தில் விஜய யாத்திரை செய்தார்கள். கிராமங்களையும் நகரங்களையும், பட்டி தொட்டிகளையும் பட்டணங்களையும் பாதத்தால் பாவனமாக்கி, மக்களுக்கெல்லாம் ஆத்மிக விஷயங்களில் ஆழ்ந்த உணர்வையும், நமது ரிஷிகள் முதலாக வழி வழி வந்துள்ள சம்பிரதாய தருமம் என்கிற செல்வத்தில் ஈடுபாட்டையும் ஊட்டினார்கள். இது ஆதிசங்கரருடைய திக்விஜயத்தின் மறுபதிப்பாகும். ஏராளமான மக்கள் பெரியவாள் நடத்தும் ஸ்ரீ சந்திரமௌளீசுவர பூஜையைக் கண்டு உவகையுற்றார்கள். உள்ளுயிரைத் தீண்டும் பெரியவாளின் உபதேசங்களைக் கேட்டார்கள். சகலத்தையும் துறந்த பரிவிராஜக தத்துவம் பூண்ட பரிசுத்தமான வடிவம் காந்தமாக மக்களை ஈர்க்க, அதனைக் காண மக்கள் நெரிந்து வந்தனர். அவரைக் கண்டும் கேட்டும், ஆனந்தவசமாகி லட்சோப லட்சம் கண்டங்கள் 'ஜய ஜய சங்கர, ஹர ஹர சங்கர' என்று கோஷித்தன.

இருபதியோராண்டு திக்விஜயமானது, சநாதன தர்மத்தை நிலைநாட்டுகின்ற ஸ்தூலமான காரியங்களுக்கு அஸ்திவாரமிட்டது. அதன் பின்னர், பெரியவாள் தமிழ்நாட்டின் பல பிரிவினருக்கும் பல இனங்களில் காரிய ரூபமான திட்டங்களைத் தந்து வருகிறார்கள். வேத வேதாந்த வளர்ச்சிக்கு விசேஷமாக அடிகோலி வருகிறார்கள். சமயச் சடங்குகளின் அவசியத்தை — சாஸ்திர ஆசாரங்களின் அவசியத்தை — வலியுறுத்துகிறார்கள். மக்களின் அக வாழ்வை அகழ்ந்திறத் தருவதோடு, அவர்கள் ஏழைகளுக்கும் பிணியாளர்களுக்கும் பணி செய்யவும் உந்துதல் அளிக்கிறார்கள். மொத்தத்தில் சர்வலோக க்ஷேமத்துக்கு ஆவன செய்து வருகிறார்கள்.

பெரியவாளின் கருணைக்கு எல்லையே கிடையாது. அது அன்ன அன்னக் குறைவதும் இல்லை. ஒருவர் அதிலிருந்து எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக எடுத்துக் கொண்டாலும், அதே வேகத்தில் அந்தக் கருணை மீண்டும் ஊற்றெடுத்துப் பாய்கிறது. இது 'ஆத்ம ஞானம்' ஒன்றையே முக்கியமாகக் கொண்ட சாதகர் விஷயத்தில் விசேஷமாகப் பொங்கும் உண்மையாகும்.

நமது மகாகுரு பரமாசாரியாளின் பாத கமலத்தின் தண்ணிழலையும், நிச்சயமான ரட்சணத்தையும் பெற உலகின் கோடிகளிலிருந்து எண்ணற்ற அடியார் வந்தவண்ணம் உள்ளனர். ஆதி சங்கரரைப் பற்றி ஒரு சுலோகம் உண்டு. "புனித காஞ்சியிலே வேரோடிய ஒரு கல்ப விருட்சம். அதன் நாலு கிளைகள் நானிலத்தின் நாற்றிசையிலும் பரவியுள்ளன. அஞ்ஞான தாபத்திலிருந்து அவை நிழல் தருகின்றன. விவேகிகளான பட்சிகள் யாவும் இந்தத் தருவில் குடிபுகுகின்றன. இந்த மரம் மோக்ஷம் என்கிற கனியைப் பழுக்கிறது" என்கிறது சுலோகம். இது நமது பெரியவாளின் மகிமையை எத்துணை பொருத்தமாகச் சொல்கிறது!

அவரது பிறந்த நாள் என்பதாகப் பெயர் வைத்து இந்த மே 28ந் தேதி அவரை நாம் வணங்குகிறோமே, அதுவும் அவர் அருள்தான்.

# ஊட்டமிக்க விவா






## சுவை மிகுந்த போஷாக்கு செறிந்த பானம்

விவா சுவையானது. பெரியவர்களுக்குப் பிடித்தமானது. குழந்தைகள் விரும்புவது. இல்லத்தரசிகளின் நம்பிக்கைக்கு உகந்தது விவா. எல்லோரும் விரும்புவது விவா.

ஏனெனில், விவா தூய பாலாடைக் கலவையோடு இன்னும் பல நல்ல பொருட்கள் அடங்கியது. விவாவில் உள்ள ப்ரோட்டீன் உங்களுக்கு வலிமை அளிக்கிறது. விவாவில் அடங்கிய கார்போஹைட்ரேட் உங்களுக்குப் புத்துணர்ச்சியைத் தருகிறது. விவாவில் மால்ட் செய்யப்பட்ட பார்லியும், கோதுமையும் நிறைந்துள்ளது. எனவே விவா எல்லாவற்றையும் விட சுவை மிகுந்த போஷாக்கு பானமாகத் திகழ்கிறது. விவா அதிநவீன தொழில்நுட்ப முறையில் உருவானது. எனவே அதன் பூரண போஷாக்கு தன்மை நீடித்து நிலைத்து நிற்கிறது. மேலும் உடனடியாக கரைகிறது.

இன்றே உங்கள் குடும்பத்துக்கு ஒரு பாட்டில் விவா வாங்கிச் செல்வீர்—புதிய வலிமையும் புத்துணர்ச்சியும் பெறுவீர்!

சிறந்த சுவைக்கும், செறிந்த சக்திக்கும் நவீன **விவா**

ULKA-V4-TAM




ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

மனிதர்களாகப் பிறந்தவர்கள் தர்ம வாழ்வு நடத்தவேண்டுமானால் சகல காரியங்களிலும் விதிப்படி நடக்க வேண்டியிருக்கிறது. இந்த விதிமுறைகளை அவர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியது அவசியம். ஆனால் அவற்றை அவர்களாக ஏற்று, சுயேச்சையாகப் பின்பற்றுவதே அழகு. ஒருவரை நிர்ப்பந்தப்படுத்தி விதிகளை அநுசரிக்கச் செய்வதில் பெருமை இல்லை. 'சம்பிரதாயம்' என்பது தானாக வழிவழியாக வந்திருக்கிறது. மக்கள், அதைத் தாமாக ஏற்றுப் பின்பற்றி வந்திருக்கிறார்கள். சம்பிரதாயத்தில் வந்துள்ள அத்தனை விதிமுறைகளையும் சாஸ்திரத்தில் சட்டம் போல் எழுதி வைக்கவில்லை. சட்டம் என்று எழுதிவிட்டால் அது நிர்ப்பந்தமாகி விடுகிறது என்பதே காரணம். 'ஸஹஸ்ரம் வத: ஏகம் மா லிக' (ஆயிரம் விஷயங்களை வாயால் எடுத்துச் சொல்லு; ஆனால் ஒன்றைக்கூட எழுத்திலே எழுதி வைத்துக் கட்டாயப்படுத்தாதே) என்பது ஆன்றோர் வாக்கு. ஆனால் இப்போது 'இதைச் செய், அதைச் செய்' என்று எதற்கெடுத்தாலும், எங்கு பார்த்தாலும் நோட்டீஸ் போடுவதும், எழுதி வைப்பதுமாக இருக்கிறது. நான் பூஜை செய்கிற இடத்திலேயே 'பேசாதே', 'சட்டை போட்டுக்கொள்ளாதே' என்றெல்லாம் எழுதி வைக்கிறீர்கள்.

நான் இப்படிச் சொல்லும்போதே ஒரு நல்ல விதியை மீறுகிறேன். 'ஒருவரிடம் எத்தனை தோஷம் இருந்தாலும் அதைப் பெரிதுபடுத்தாதே; சிறிது குண விசேஷம் இருந்தாலும் அதையே கொண்டாட வேண்டும்' என்பது பெரியோர் உபதேசம். நானோ உங்கள் தவற்றை இப்போது அம்பலப்படுத்துகிறேன். பிறரது குறைகளை வெளிப்படுத்தக் கூடாது. அவர்களிடம் உள்ள நல்ல அம்சங்களையே வெளிப்படுத்த வேண்டும். தேய்ந்துபோன சந்திர கலைக்கும் கூடக் குளுமையும், பிரகாசமும் இருப்பதால் அதைப் பரமசிவன் தம் தலையில் தரித்து உலகமெல்லாம் பார்த்துப் புகழும்படி செய்கிறார். அதே ஈசுவரன் மகா கொடிய ஆலகால விஷத்தை யார் கண்ணிலும் தெரியாமல் தம் கண்டத்தில் ஒளித்து வைத்திருக்கிறார். இவ்வாறு தண்டி என்ற கவி கூறுகிறார்.

ஆனால் தோஷம் பார்க்கிறதும் அதைப் பெரிது செய்து பேசுவதுமே பொதுவில் அதிகமாயிருக்கிறது. அதிலும் நிறையப் படித்தவர்கள் நிறையக் குற்றம் காண்பார்கள். ''குற்றம் கண்டுபிடிப்பதுதான் அறிவாளியின் காரியம். 'வித்வான்' என்றாலே 'தோஷக்ஞன்' என்று லட்சணம் சொல்லியிருக்கிறது'' என்று இவர்கள் வாதம் செய்யலாம். 'தோஷக்ஞன்' என்றால் 'குற்றம் **அறிந்தவன்**' என்றே அர்த்தம். குற்றத்தைப் பெரிதுபடுத்திப் **பிரசாரம் செய்பவன்** என்றல்ல. குற்றம் குறைகளை உணர வேண்டும். உணர்ந்து, அவற்றை நாம் தவிர்க்க வேண்டும். குற்றம் உள்ளவர்களுக்கு இதை இதமாக எடுத்துச் சொல்லலாம். ஆனால் ஓயாமல் தோஷம் பாராட்டிக் கொண்டிருக்கக் கூடாது.

தோஷமுள்ளவரிடம் அதை எடுத்துக் காட்ட வேண்டுமானால் நமக்குப் பூர்ண யோக்கியதை இருக்க வேண்டும். நம்மிடமே ஏராளமான தோஷங்களை வைத்துக்கொண்டு இன்னொருத்தருக்கு உபதேசம் செய்தால் அது பிரயோஜனப்படாது. சில சமயங்களில் நாம் சொல்வதாலேயே அவர்கள் முன்னைவிட வீம்பாகத் தங்கள் தவற்றை வெளிப்படச் செய்யவும் தொடங்கலாம். 'நமக்கு யோக்கியதை இருக்கிறது. ஸ்தானம் இருக்கிறது. நம் வார்த்தை எடுபடும்' என்று நிச்சயமானாலே பிறருக்கு உபதேசிக்கலாம்.

ஒருவரது நல்ல அம்சத்தைக் கொண்டாடுவதால் அவருக்கு மேலும் உற்சாகம் உண்டாகிறது. அந்தக் குணங்களை விருத்தி செய்து கொள்கிறார். ஆனாலும் ஒருவரைப் புகழுவதிலும் நமக்குக் கட்டுப்பாடு இருக்க வேண்டும். ஓரேயடியாக ஸ்தோத்திரம் செய்து ஒருவரை அகங்காரத்துக்கு ஆளாக்கி விடக்கூடாது. புகழ்ச்சி ஒரு நுட்பமான விஷயம். இதனால்தான் பெரியோர்கள், ''ஈசுவரனையும் குருவையும் மட்டுமே நேரில் துதிக்கலாம்; பந்து மித்திரர்களை நேரில் புகழாமல் மற்றவர்களிடமே போற்றிப் பேச வேண்டும்; வேலையை முடித்த பின்னரே ஊழியரைப் பாராட்டலாம்; பிள்ளையை ஒருபோதும் புகழக் கூடாது'' என்றார்கள்.

ப்ரத்யக்ஷே குரவ: ஸ்துத்யா:
பரோக்ஷே மித்ர பாந்தவா: |
கார்யாந்தே தாஸ ப்ருத்யாச்ச
ந ஸ்வபுத்ரா: கதாசன ||






# கோடையில் லகுவாக நடவுங்கள்

காற்றோட்டமுள்ள பாட்டா செருப்புகளை அணிந்திருக்கையில் உங்கள் பாதங்கள் இலேசாக இருப்பதை உணர்வீர்கள். ஒல்லியான எடையோடு இருப்பதிலிருந்து நாள் முழுவதும் உங்கள் பாதங்கள் புத்தம் புதிதாக இருக்கும் வகையில் இவை டிசைன் செய்யப்பட்டிருப்பதையும் நீங்கள் நன்குணர்ந்துகொள்ள முடியும். இன்றே ஒரு ஜோடி அணிந்து பாருங்கள்.

**Bata**






## 2. ரயில்வே சந்திப்பு

டில்லி ரயில்வே நிலையத்துக்குள் கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் பிரவேசித்தபோது பக்கத்துப் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த நூற்றுக்கணக்கான முகங்கள் சீதாவின் கண்களில் தோன்றி மறைந்தன. ஆனால், அவளுடைய கண்களிலோ, கவனத்திலோ அந்த முகங்கள் ஒரு கணமும் நிற்கவில்லை. ஒரே ஒரு சுந்தர முகத்தை – தன் உள்ளத்தில் உறைந்து ஆத்மாவுடன் கலந்த முகத்தை – சீதாவின் கண்கள் ஆர்வத்துடன் தேடின. அந்த முகம் தெரிந்ததும், "வஸந்தி! அதோ அப்பா!" என்று சீதா கூச்சலிட்டது ரயில்வே ஸ்டேஷன் சத்தங்கள் அவ்வளவுக்கும் மேலாகக் 'கிரீச்' என்று கேட்டது.

சௌந்தரராகவனைப் பார்த்த பிறகு கூட இந்தச் சனியன் பிடித்த ரயில் எதற்காக மேலே நகருகிறது என்று சீதாவுக்குத் தெரியவில்லை. ராகவன் நின்ற இடத்துக்கு அப்பால் சுமார் முப்பது அடி தூரத்தில் சீதா இருந்த வண்டி போய் நின்றது:

"வஸந்தி, அதோ பார், அப்பா வருகிறார்!" என்று குதூகலித்தாள் சீதா. "அப்பா எங்கே? காத்து அம்மா!" என்றான் குழந்தை.

கூட்டத்தில் இடிபடாமல் நாஸூக்காகப் புகுந்து விலகிக் கொண்டு சீதா இருந்த வண்டியை நோக்கி வந்து கொண்டிருந்தவன் திடீரென்று பாதி வழியில் நின்றான்.

சீதா நின்ற வண்டிக்கு எதிர்ப்புறத்தில், பிளாட்பாரத்தின் மறுபக்கத்திலிருந்து ஒரு ரயில் 'வீல்' என்று சத்தமிட்டுக் கொண்டு புறப்பட்டது. சௌந்தர ராகவன் அந்த வண்டியை நோக்கினான். ஒரு கணம் அங்கேயே தயங்கி நின்றான். பிறகு சீதாவை நோக்கி வருவதற்குப் பதிலாக, எதிர்ப்புறத்தில் புறப்பட்டுக் கொண்டிருந்த வண்டியை நோக்கி அவசரமாகச் சென்றான். இந்தச் சமயம் அவன் கூட்டத்தையும் நெருக்கத்தையும்பொருட்படுத்தவில்லை. முட்டி மோதிக் கொண்டும், இடித்துப் பிடித்துக் கொண்டும் சென்றான். ராகவன் இலக்கு வைத்துப் போன ரயில் வண்டியில் பலகணிக்கு அருகில் இரண்டு பெண்கள் உட்கார்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருத்தியைப் பார்த்து ராகவன் ஏதோ கேட்டான். அவள் ஏதோ பதில் கூறினாள். இவன் திரும்ப ஏதோ சொன்னான். இதற்குள் ரயில் நகரத் தொடங்கியது. கடைசி கார்டு வண்டி போகிற வரையில் ராகவன் அங்கேயே நின்று,

போகும் ரயிலேயும் பலகணிக்கு வெளியில் தெரிந்த அந்தப் பெண்ணின் முகத்தையும் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு திரும்பிச் சீதா இருந்த வண்டியை நோக்கி வந்தான்.

மேலே கூறிய நிகழ்ச்சியைச் சீதா கண் கொட்டாத ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு நின்றாள். தன்னையும் குழந்தையையும் பார்த்த பிறகு சௌந்தர ராகவன் நேரே தங்களிடம் வராமல் எதிர்ப் பக்கத்து ரயிலை நோக்கிப் போனது சீதாவுக்குச் சிறிது ஏமாற்றம் அளித்தது. இன்னொரு ரயிலில் இருந்த பெண்கள் யார் என்பது அவளுக்குத் தெரியாது. எனினும் தன்னை விட அவர்களை முக்கியமாகக் கருதி ராகவன் அங்கே போய்ப் பேசியது சீதாவின் உள்ளத்தில் 'சுருக்' என்ற வேதனையை உண்டாக்கிற்று.

மேற்சொன்னதெல்லாம் அவளுடைய உள்ளத்தின் ஒரு நிமிஷ நேரத்து அநுபவம்தான். ராகவன் அருகில் வந்ததும் மனம் ஒரே குதூகலமடைந்தது. ''வஸந்தி! அப்பாகிட்டப் போ'' என்று சொல்லிக் கொண்டே குழந்தையைப் பலகணி வழியாக வெளியே எடுத்து விட்டாள். குழந்தை தாவிக்கொண்டு அப்பாவிடம் சென்றது. ராகவனும் ஆசையோடு வாங்கிக் கொண்டான். ஆனாலும் அவனுடைய மனம் குழந்தையிடம் லயிக்கவில்லை என்பதை அவன் முகம் காட்டியது.

பிளாட்பாரத்தில் நடந்த மேற்படி ஒரு நிமிஷ நாடகத்தைப் பற்றிக் காமாட்சி அம்மாளுக்கு ஒன்றும் தெரியாது. அவள் சாமான் வகையறாக்களைச் சரிபார்த்து வண்டியிலிருந்து இறக்குவதில் முனைந்திருந்தாள்.

''சீதா! முதலில் நீ கீழே இறங்கு! சாமான்களை யெல்லாம் இறக்கியபிறகு நான் இறங்குகிறேன்!'' என்றாள் காமாட்சி அம்மாள்.

சீதா வண்டியிலிருந்து இறங்கினாள். போர்ட்டர்களுக்குக் கட்டளை போட்டுக் கொண்டிருந்த சௌந்தர ராகவனுக்குப் பக்கத்தில் போய் நின்றாள். அவனாக ஏதாவது சொல்லுவான், கேட்பான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் அவன் ஒன்றும் பேசுகிறவழியாகக் காணவில்லை.

''நீங்கள் ஸ்டேஷனுக்கு வருவீர்களா வர மாட்டீர்களா என்று நானும் அம்மாவும் பந்தயம் போட்டுக்கொண்டு வந்தோம்!'' என்றாள் சீதா.

ராகவன் காதில் அது விழுந்ததாகவே தோன்றவில்லை. அவன் மனம் வேறு எங்கேயோ சஞ்சரித்துக் கொண்டிருந்தது.

''புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு வஸந்திக்கு உடம்பு சரியில்லை. புறப்பட முடியுமோ என்னமோ என்று பயமாய்ப் போய் விட்டது'' என்றாள் சீதா.

கொஞ்சம் ராகவனுடைய கவனம் திரும்பியது. ''வஸந்திக்கு என்ன உடம்பு?'' என்று கேட்டான்.

''அஜீரணம் மாதிரி இருந்தது.''

''குழந்தைகளுக்கு அஜீரணமே வரக் கூடாது. குழந்தைகளுக்கு என்ன விதமான உடம்புக்கு வந்தாலும் அது வளர்ப்பவர்களுடைய தப்புதந்தான்'' என்று ராகவன் கடுமையான குரலில் கூறினான்.

தான் ஆரம்பித்த பேச்சு பிசகாய்ப் போய்விட்டதென்பதை அறிந்து சீதா மௌனமானாள்.

சாமான்கள் இறக்கப்பட்ட பிறகு காமாட்சி அம்மாள் பெஞ்சுகளுக்கு அடியில் குனிந்து பார்த்து விட்டு ரயிலிலிருந்து இறங்கினாள்.

ராகவனை அருகில் வந்து பார்த்து, ''ஏண்டா, அப்பா! இப்படி இளைத்துப் போயிருக்கிறாயே?'' என்றாள்.

''ஆமாம், அம்மா! இளைத்துத்தான் போய்விட்டேன். இத்தனை நாள் உங்களை யெல்லாம் பார்க்காத கவலையினாலேதான்!'' என்றான் ராகவன்.

இந்தச் சமயத்தில் அதே ரயிலில் வேறொரு வண்டியிலிருந்து இறங்கிய சூரியா அவர்கள் நிற்குமிடத்துக்குச் சமீபமாய் வந்து சேர்ந்தான்.

ராகவன் அவனை ஏறிட்டுப் பார்த்தான். ஆனால் ஒன்றும் பேசவில்லை. போர்ட்டர்களைப் பார்த்துச் ''சாமான்களை எடுங்கள்'' என்றான்.

சூரியாவுடன் ராகவன் பேசாதது சீதாவுக்கு மனக் கஷ்டத்தை அளித்தது. சூரியாவைக் கடைக் கண்ணால் பார்த்தாள்; அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

பிறகு மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு, ''சூரியாவை உங்களுக்குத் தெரியுமோ இல்லையோ?'' என்று கேட்டாள்.

''எந்தச் சூரியாவை?'' என்றான் சௌந்தரராகவன்.

''எந்தச் சூரியா என்கிறீர்களே? லலிதாவின் அண்ணா சூரியாதான்!''

''மாப்பிள்ளை! அடியோடு என்னை மறந்து விட்டீர்கள் போலிருக்கிறது!'' என்றான் சூரியா.

''ஓகோ! கல்யாணத்தின்போது ஒரே கோபமாக இருந்தானே, அந்தப் பையனா? இங்கு எங்கே வந்தான்?'' என்று ராகவன் கேட்டான்.

இதனால் சீதாவின் மனக் கஷ்டம் மேலும் அதிகமாயிற்று.

நல்ல வேளையாக அந்தச் சமயம் காமாட்சி அம்மாள் அவர்களுடைய பேச்சில் தலையிட்டாள்.

''வழிநெடுகச் சூரியா தான் எங்களுக்கு ஒத்தாசையாக இருந்து வந்தான் அவன் வந்திராவிட்டால் எங்களுக்கு ரொம்பக் கஷ்டமாகப் போயிருக்கும்'' என்றாள்.

''இந்த வண்டியிலேயே இவன் வந்தானா என்ன? இறங்குகிறபோது நான் பார்க்கவில்லையே?'' என்றான் ராகவன்.

''இல்லை, மாப்பிள்ளை ஸார்! நான் மூன்றாம் வகுப்பு வண்டியில் வந்தேன். அப்படி ஒன்றும் இவர்களுக்கு நான் பிரமாதமான ஒத்தாசை செய்துவிடவில்லை!'' என்றான் சூரியா.

''அதனால் பாதகமில்லை. ஆனால் என்னை மட்டும் 'மாப்பிள்ளை ஸார்' என்று கூப்பிடாமல் இருந்தால் சரி. கொஞ்சம் அநாகரிகமாகத் தோன்றுகிறது!'' என்றான் ராகவன்.

இதற்குள் போர்ட்டர்களின் தலையில் சாமான்கள் ஏறிவிட்டன. ராகவன் கையிலிருந்த குழந்தையைக் காமாட்சி அம்மாள் வாங்கிக் கொண்டாள். ராகவன் முன்னால் வழிகாட்டிச் செல்ல மற்றவர்கள் பின்தொடர்ந்து சென்றார்கள்.

''இதுதானா நமக்கு வாங்கியிருக்கிற மோட்டார் கார்?'' என்று சீதா கேட்டாள். அவளுடைய குரலில் குதூகலம் தொனித்தது.

அதற்கு ராகவன் பதில் சொல்லவில்லை. சாமான்களைக் காரில் ஏற்றியானதும் காமாட்சி அம்மாளையும் சீதாவையும் குழந்தையுடன் பின் ஸீட்டில் உட்காரச் செய்தான். தான் முன்புறத்தில் டிரைவருடைய ஸீட்டில் உட்கார்ந்து கொண்டான்.

அவனுக்குப் பக்கத்து ஸீட் காலியாகத்தான் இருந்தது. சூரியா விடைபெற்றுக் கொள்வதற்காக நின்றான். காலி இடத்தில் சூரியாவை ஏறிக் கொள்ளச் சொன்னால் என்ன என்று சீதாவுக்குத் தோன்றியது. ராகவன் சொல்வான் என்று எதிர்பார்த்தாள். அவன் சொல்லவில்லை.

சீதா ஏமாற்றத்துடன் சூரியாவைப் பார்த்தாள். அவளுடைய மனநிலையைத் தெரிந்து கொண்ட சூரியா முகபாவத்தினால் தன் அநுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டான்.

வண்டி புறப்படலாயிற்று. சீதா மெல்லிய குரலில், ''அம்மா! சூரியா உங்களிடம் சொல்லிக் கொள்கிறான் போலிருக்கிறது!'' என்றாள்.

காமாட்சி அம்மாள், ''ஏண்டாப்பா சூரியா! போய் வருகிறாயா? ஊருக்குப் போவதற்குள்ளே ஒரு நாளைக்கு ஆத்துக்கு வந்துட்டுப் போ!'' என்று சொன்னாள்.

சீதாவுக்கு மாமியாரிடம் நன்றி உணர்ச்சி பொங்கியது.

சூரியா, ''ஆகட்டும், மாமி! அவசியம் வந்துவிட்டுப் போகிறேன். மாப்பிள்ளை! உங்களுடைய விலாசம் என்ன?'' என்று கேட்டான்.

ராகவனுடைய குணம் ஒருவாறு சூரியாவுக்கு ஏற்கெனவே தெரிந்துதான் இருந்தது. அதற்காக அத்தங்காளின் உறவை விட்டுவிடுவதாக அவனுக்கு உத்தேசம் இல்லை. மாப்பிள்ளை தன்னை அழைக்காவிட்டாலும் அவர்களுடைய ஜாகையில் போய்ப் பார்த்துவிட்டு வருகிறது என்று தீர்மானித்திருந்தான்.

''நம்பர் எட்டு, நாதிர்ஷா ரோட்'' என்று சொல்லிவிட்டு ராகவன் மோட்டாரை விட்டான்.

மோட்டார் போகத் தொடங்கியதும் சீதா மறுபடியும் உற்சாகம் கொண்டாள். ''வஸந்தி! பார்த்தாயா? அப்பா மோட்டார் ஓட்டுகிறார்!'' என்றாள்.

''நானும் மோத்தார் ஒத்துவேன்!'' என்றாள் வஸந்தி.

சீதா கல கல வென்று சிரித்தாள். ''கேட்டீர்களா, அம்மா! உங்கள் பேத்தியின் பேச்சை! இவளும் கார் ஓட்டுவாளாமே!'' என்றாள்.

''ஓட்டினாலும் ஓட்டுவாள். இவள் பெரியவளாகும்போது உலகத்திலே இன்னும் என்னவெல்லாம் அதிசயம் நடக்கப் போகிறதோ!'' என்றாள் காமாட்சி அம்மாள்.

ராகவன் அப்போது பேச்சில் தலையிட்டு, ''அம்மா! பொம்மனாட்டிகள் கார் ஓட்டுகிறது, வரப் போகிற அதிசயம் இல்லை. இப்போதே எத்தனையோ ஸ்திரீகள் கார் ஓட்டுகிறார்கள். அதனால் வீதிகளில் ஒரே அபாயமாய்ப் போய் விட்டது. பெண் பிள்ளை ஓட்டுகிற மோட்டார் கார் வருகிறதென்றால் வீதி உடனே காலியாகிவிடுகிறது! ஜனங்கள் அப்படிப் பயந்து நாலாபுறமும் ஓடி ஒதுங்குகிறார்கள்!'' என்று சொன்னான்.

ராகவனுடைய நகைச்சுவையை ரசித்துச் சீதா சிரித்தாள். பழைய அநுபவத்திலிருந்து ராகவனுடைய ஹாஸ்யத்தைப் புரிந்து கொண்டு சிரிக்காவிட்டால் அவனுக்குக் கோபம் வரும் என்பதைச் சீதா அறிந்திருந்தாள். ஏதாவது புரியாவிட்டால் ராகவன் விளக்கிச்

# நீங்கள் எந்த வேலை செய்தாலும், பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை நல்ல முறையில் செய்ய உதவுகிறது.



உங்கள் படிப்பறையில் படிக்கும்போது பிலிப்ஸ் உங்கள் கண்களைப் பாதுகாக்கிறது.



உங்கள் குளியலறையில், நல்ல முறையில் க்ஷவரம் செய்து கொள்ள பிலிப்ஸ் உதவுகிறது.

பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் 100 வாட் பல்பினைப் போல் இரு மடங்கு ஒளி தருகிறது. இந்த ஒளி சிறந்ததும், பிரகாசமானதும், கூசாததுமானது. கண்களுக்குக் குளிர்ச்சி தருகிறது. இருந்தும், மின்சாரச் செலவு ஒரு 40 வாட் பல்புக்காகும் அளவேதான்.

இந்தக் கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் இணைப்பு ஒரு பிலிப்ஸ் 40 வாட் ஃப்ளூரோஸெண்ட் பல்பு கொண்டது. அது சிறந்த, அதிகப் பிரகாசமான ஒளியைத் தருகிறது.

பிரபலமான பிலிப்ஸ் பாலியெஸ்டர் பலாஸ்ட், ஸ்டார்ட்டர், ஸ்டார்ட்டர் ஹோல்டர் மற்றும் ஸ்ப்ரிங் இணைந்த ரோடார் லாம்ப் ஹோல்டர், இவைகளைக் கொண்டது பிலிப்ஸ் ஸ்ட்ரிப் லைட். பொருத்துவதற்கு எளிதானது.

உபயோகத்திற்குச் சிக்கனமானது. குறைந்த சிரமத்தில் நம் வேலைகளை முடிக்க உதவுகிறது.

இன்றே பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்துங்கள் — உங்கள் வீடு, ஆபீஸ், கடை மற்றும் தொழிற்சாலையில்.



உங்கள் சமையலறையில், நல்ல முறையில் சமையல் செய்ய பிலிப்ஸ் உதவுகிறது.



## பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்

மூலம் அரைப்பங்கு செலவில் இரு பங்கு வெளிச்சம் பெறுங்கள்.



பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL.3558

பவுடரினுல் துலக்கிய
பாத்திரத்தின் மீது பொடிக் கசடு
பின்தங்கியிருக்கிறதா?

# மாசில்லாத பளபளப்பை
# வீசிட வைப்பது
# விம்.

*கசடு இல்லை!*
*பிசுக்கு இல்லை!*
*கீறல் இல்லை!*




லின்டாஸ்.V-34-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

சொல்ல மாட்டான். "உன்னிடம் வந்து சொல்லப் போனேனே?" என்று முடித்து விடுவான். இதனால் அவன் பேச்சுப் புரிந்தாலும் புரியா விட்டாலும் சீதா சமயோசிதம் பார்த்துச் சிரித்து விடுவது வழக்கம்.

சீதாவின் சிரிப்பு நிற்பதற்குள் 'டர்ர்' என்ற சத்தத்துடன் கார் நின்றது. ராகவன் சட்டென்று பிரேக் போட்டு வண்டியை நிறுத்தினான். வயதான முஸ்லிம் ஸ்திரீ ஒருத்தி உயிர் தப்பினாள். இன்னும் அரை அங்குலம் வண்டி நகர்ந்திருந்தால் அந்த முஸ்லிம் ஸ்திரீயின் பேரில் மோதி அவளைக் கீழே தள்ளியிருக்கும்!

முதலில் காமாட்சி அம்மாளுக்கும், சீதாவுக்கும் விஷயம் இன்னதென்று புரியவில்லை. தெரிந்து கொண்டதும் அவர்களுக்கு அடிவயிற்றில் நெருப்புச் சுட்டது போலிருந்தது.

"ஏம்மா மோத்தார் நின்னுத்து?" என்று கேட்டாள் வஸந்தி.

மறுபடியும் கார் போக ஆரம்பித்ததும், காமாட்சி அம்மாள், "ஏண்டாப்பா! மோட்டார் ஓட்டுவதற்கு டிரைவர் வைத்துக் கொள்ளவில்லையா? நீயே எதற்காக ஓட்ட வேண்டும்?" என்றாள்.

"டிரைவர் வைத்துக் கொண்டால் சம்பளம் கொடுக்க வேணுமே? மாதா மாதம் பணத்துக்கு எங்கே போகிறது? இந்த ஊரிலே டிரைவர்களுக்கு ரொம்பக் கிராக்கி!" என்றான் ராகவன்.

அப்போது சௌந்தர ராகவனுக்கு மாதம் ஆயிரத்து இருநூறு ரூபாய் சம்பளம் என்பது அவன் தாயார், மனைவி இருவருக்கும் தெரியும். ஆகையால், "பணத்துக்கு எங்கே போகிறது?" என்று அவன் கேட்டது பரிகாசத்துக்காக என்றே நினைத்தார்கள். சீதா சிரித்தாள்.

"எதற்காகச் சிரிக்கிறாய்? நான் சொல்கிறது வேடிக்கை என்று நினைத்தாயா?" என்றான் ராகவன்.

"ஆமாம்!" என்றாள் சீதா.

"எதனால் வேடிக்கை என்று உனக்குத் தோன்றுகிறது?" என்று ராகவன் கேட்டான்.

"மாதம் ஆயிரத்து இருநூறு ரூபாய் சம்பளம் வருகிறது; டிரைவருக்குக் கொடுக்கப் பணம் இல்லையென்றால் யாராவது நம்புவார்களா? உங்கள் செல்வக் குமாரி வஸந்திகூட நம்ப மாட்டாளே?" என்றாள் சீதா.

"பெண்ணையும் உன்னைப் போலவே வளர்த்துக் கொண்டு வருகிறாயாக்கும்" என்றான் ராகவன்.

அதற்கும் சீதா சிரித்துக் கொண்டே, "என் மாதிரி வளர்க்காமல் வேறு யார் மாதிரி வளர்க்க வேண்டுமாம்?" என்று கேட்டாள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ராகவன் ஓட்டிய கார் தனக்கு இந்து முஸ்லிம் வேற்றுமைப் புத்தி கிடையாது என்று நிரூபித்தது. இப்போது ஒரு ஹிந்து ஸ்திரீ மீது அது ஏறப் பார்த்தது. நல்ல வேளையாக ஏறிவிடவில்லை.

"ஏண்டாப்பா ராகவா! இன்னும் மோட்டார் நன்றாய் விடுவதற்கு நீ கற்றுக்கொள்ளவில்லை போலிருக்கிறதே? அதற்குள்ளே என்ன அவசரம்? நன்றாகக் கற்றுக் கொள்ளுகிற வரையிலாவது டிரைவர் வைத்துக் கொள்ளக் கூடாதா?" என்றாள் காமாட்சியம்மாள்.

"எனக்கு நன்றாய் மோட்டார் விடத் தெரியும் அம்மா! ஆனால் இன்றைக்கு மனசு கொஞ்சம் குழம்பி யிருக்கிறது. அதனால்...."

"இன்றைக்கு மனசு எதற்காகக் குழம்ப வேண்டும்?"

"செத்துப் போனதாக நாம் நினைத்துக்கொண்ட ஒருவர் திடீரென்று உயிரோடு வந்து நின்றால், மனக் குழப்பம் ஏற்படாதா? அதிலும் தான் தானில்லை என்று சாதிக்கப் பார்த்தால்?..."

"என்ன சொல்கிறாய், ராகவா! எனக்கு அப்படி ஒன்றும் உடம்பு அதிகமில்லையே? நாலு நாளைக்கு இன்புளூயன்ஸா சுரமா யிருந்தது! அவ்வளவு தான். ஏண்டி சீதா! நீ ஏதாவது எனக்கு உடம்பு ரொம்ப அதிகமா யிருந்தது என்று கடிதம் எழுதி விட்டாயோ?"

"உங்களுடைய உடம்பைப் பற்றி நான் எழுதவே யில்லையே?" என்றாள் சீதா.

"நானும் உங்களைச் சொல்லவில்லை, அம்மா! உங்களுக்கு உடம்பு அசௌகரியமா யிருந்த விஷயமே எனக்கு இது வரைக்கும் தெரியாது. வேறொருவரைப் பற்றிச் சொன்னேன்."

"அப்படியா! யார் செத்துப் பிழைத்து உயிரோடு வந்தது?"

"ரயில்வே ஸ்டேஷனில் நீங்கள் பார்க்கவில்லையா?"

"நான் பார்க்கவில்லையே! எந்த ரயில்வே ஸ்டேஷனில்?"

"டில்லி ஸ்டேஷனில்தான். உங்கள் வண்டி வந்து நின்றதும் எதிர்ப்புறத்தில் ஒரு வண்டி புறப்பட்டது. அதிலே பார்க்கவில்லையா?"

"நான் ஒன்றும் பார்க்கவில்லை. அதில் யார் போனது?"

"அப்புறம் சொல்கிறேன்" என்றான் ராகவன்.

காமாட்சி அம்மாள் எதிர்ப்புறத்து ரயிலைப் பார்க்கவில்லைதான்; ஆனால் சீதா பார்த்துக் கொண்டிருந்தாள். ராகவன் ஓடிப் போய் யாரோ ஒருத்தியிடம் இரண்டு வார்த்தைகள் பேசியதையும், அதற்குள்ளே வண்டி போய் விட்டதையும், ராகவன் ஒரு மாதிரி முகத்துடன் திரும்பி வந்ததையும் சீதா பார்த்துத் தன் மனத்தில் பதிய வைத்துக் கொண்டிருந்தாள்.

''அந்த ரயிலில் போனது யார் என்று கேளுங்கள், அம்மா!'' என்று மாமியாரைத் தூண்டினான்.

இதற்குள் மூன்றாவது தடவையாக மோட்டார் வண்டி நின்றது. சடக்கென்று நின்றபடியால் மறுபடியும் மாமியாருக்கும் மருமகளுக்கும் பயம் உண்டாயிற்று.

''என்ன? என்ன?'' என்றார்கள்.

''ஒன்றும் இல்லை. வீடு வந்துவிட்டது!'' என்றான் ராகவன். சீதா வீட்டைப் பார்த்தாள். அழகான சின்னஞ் சிறு பங்களா. முன்புறத்திலும் இரு பக்கங்களிலும் பூஞ்செடிகள்; இள மரங்கள். சீதாவின் உள்ளத்தில் இன்பம் பொங்கித் ததும்பியது. வஸந்தி! உன் வீட்டைப் பாரடி! எவ்வளவு அழகாயிருக்கிறது!'' என்றாள்.

''இது அப்பா கத்திய வீதா அம்மா? நம்பளுக்காகக் கத்திவிருக்கானா?'' என்றாள் வஸந்தி.

## 3. துயரத்தின் வித்து

கல்யாணம் நடந்த உடனேயே சௌந்தரராகவன் சீதாவைத் தன்னுடன் புதுடில்லிக்கு அழைத்துப்போனான். இங்கிலீஷ் ஹோட்டல் ஒன்றில் தாற்காலிகமாக அவர்கள் தங்கினார்கள். ஒரு மாத காலம் கந்தர்வ லோகத்தில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தார்கள்.

புதுடில்லியின் அழகான சாலைகளிலும், சதுக்கங்களிலும் பழைய டில்லியின் இடிந்த கோட்டைகளிலும் இடியாத அரண்மனைகள் — மசூதிகளிலும் அவர்கள் கைகோத்துக் கொண்டு உலாவி வந்தார்கள். இம்மாதிரி சில வருஷங்களுக்கு முன்னால் இன்னொரு பெண்ணுடன் கைகோத்துக் கொண்டு இதே இடங்களில் உலாவியது பற்றி ராகவனுக்கு அவ்வப்போது நினைவு வருவதுண்டு. ஆனால் அந்த நினைவை அலட்சியமாக உதறி எறிந்து விட்டுப் பக்கத்தில் நின்ற தன் தர்மபத்தினி சீதாவின் கரத்தை ராகவன் கெட்டியாகப் பிடித்துக் கொள்வான்.

பிறகு ராகவன் இங்கிலாந்துக்கு அவசரமாகப் புறப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதன்பேரில் சீதாவைச் சென்னைக்கு அழைத்து வந்து தன் பெற்றோர்களிடம் விட்டான். தானும் சில நாட்கள் தங்கியிருந்து, சீதாவுக்கு ஆயிரம் விதமாகத் தேறுதல் கூறினான். அச்சமயம் சீமைக்குப் போவதால் தன்னுடைய உத்தியோக வாழ்க்கைக்கு ரொம்ப அநுகூலம் ஏற்படும் என்றும், அப்படிப்பட்ட அருமையான சந்தர்ப்பம் மறுபடியும் கிடைப்பது அரிது என்றும், அதை நழுவவிடுதல் மிக்க அறிவீனமாகும் என்றும் எடுத்துச் சொன்னான். மனதாரத் தெரிந்தெடுத்து ஆசையுடன் மணந்துகொண்ட மனைவியை அவ்வளவு சீக்கிரம் பிரிந்து செல்வதில் தனக்கு மட்டும் வருத்தமில்லையா என்று கேட்டான். வாழ்க்கையில் தன்னுடைய முன்னேற்றத்துக்கு அவள் குறுக்கே நிற்கலாமா என்றான். அடுத்த தடவை தான் வெளிநாட்டுக்குப் பிரயாணமாகும்போது அவளையும் அவசியம் அழைத்துப் போவதாக உறுதி மொழி கூறினான்.

சீதாவுக்கு ஒரு பக்கத்தில் தன்னுடைய இதய நாயகனை இவ்வளவு சீக்கிரத்தில் பிரிய வேண்டியிருக்கிறதே என்று துக்கம் துக்கமாய் வந்தது. இன்னொரு பக்கத்தில் ராகவன் சீமைக்குப் போவது பற்றிப் பெருமையாகவும் இருந்தது. அழுதுகொண்டே சிரித்தாள், சிரித்துக் கொண்டே அழுதாள். ஒரு நிமிஷம் ''போகவே கூடாது'' என்று பிடிவாதம் பிடித்தாள்: அடுத்த நிமிஷம், ''கட்டாயம் போக வேண்டும்'' என்று வற்புறுத்தினாள். கடைசியாக விடை கொடுத்து அனுப்பினாள்.

ராகவன் திரும்பி வருவதற்குப் பதினைந்து மாதங்களுக்கு மேலாயிற்று. அதற்குள் சீதாவின் வாழ்க்கையில் பல முக்கியமான நிகழ்ச்சிகள் நேர்ந்தன. அவளுடைய அருமைத் தாயார் பம்பாய் ராஜம்மாள் தன் ஒரே மகளுக்கு நல்ல இடத்தில் மணம் செய்து கொடுத்தோம் என்ற மனத் திருப்தியுடன் இந்த மண்ணுலகை நீத்துச் சென்றாள். தன்னுடைய புருஷர் துரைசாமி அய்யரின் மடியின்மீது தலையை வைத்துக் கொண்டு கடைசி மூச்சை விடும் பாக்கியம் அவளுக்குக் கிடைத்தது. அதோடு அவள் பெரிதும் ஆசை வைத்திருந்த அகண்ட காவேரிக் கரை

யில் அவளுடைய உடல் தகனமாகும் பேறும் கிடைத்தது.

தாயார் இறந்து பல தினங்கள் வரையில் சீதா கண்ணீரும் கம்பலையுமாயிருந்தாள். மாமியார் எத்தனை ஆறுதல் சொல்லியும் அவளுடைய துக்கம் தீரவில்லை. மாமனார் பகவத் கீதையிலிருந்து எவ்வளவு சுலோகங்கள் சொல்லி வியாக்கியானம் செய்து காட்டியும் அவளுடைய மனம் நிம்மதியடையவில்லை. இப்பேர்ப்பட்ட துக்கம் தனக்கு நேர்ந்த சமயத்தில் தன் அருமைக் கணவர் பக்கத்தில் இல்லாமற் போனது அவளுடைய துயரத்தை அதிகமாக்கியது.

உண்மையான அன்பு; ஸ்நேகம் இவற்றின் பெருமை அதுதான் அல்லவா? அன்புடையவர்களிடமும் சிநேகிதர்களிடமும் துக்கத்தைப் பகிர்ந்துகொண்டால் துக்கம் குறைந்து சீக்கிரத்திலேயே மனச் சாந்தி ஏற்படுகிறது. அன்புள்ளாரிடம் சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டால் அந்தச் சந்தோஷம் பொங்கிப் பெருகுகிறது. சீதாவுக்கு நேர்ந்த பெருந் துக்கத்தை அவளுடன் பகிர்ந்து கொள்ளச் சௌந்தர ராகவன் அருகில் இல்லை. இதனால் அவளுடைய துக்கம் வெகு காலம் நீடித்திருந்தது.

சீதாவின் வாழ்க்கையில் இன்னொரு முக்கிய சம்பவம் — சந்தோஷமான சம்பவம் — நேர்ந்த பிற்பாடுதான் அந்தத் துக்கம் மறைந்தது.

சீதா தன் உயிருக்கே நேர்ந்த அபாயத்திலிருந்து கடவுள் அருளால் பிழைத்தெழுந்து தான் பெற்ற செல்வக் கண்மணியைப் பார்த்த பிறகு மற்றதெல்லாம் அவளுக்கு மறந்தே போய் விட்டது. தாயாரை நினைத்துக்கொண்டு துக்கப்படுவதற்கு இனிமேல் அவளுக்கு நேரம் ஏது? அதோடு கூட, காமாட்சி அம்மாளும், மற்றும் அக்கம் பக்கத்து மூதாட்டிகளும் ''உன் அம்மாவே உன் வயிற்றில் பெண்ணாய் வந்து பிறந்து விட்டாள்!'': என்று அடிக்கடி சொன்னதனால் சீதாவுக்கும் அத்தகைய நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தன் குழந்தையின் முகத்தைப் பார்ப்பதில் உண்டான ஆனந்தத்தில் தன்னைப் பெற்ற தாயின் முகத்தை மறந்தாள். சீமைக்குப் போயிருக்கும் கணவன் திரும்பி வந்ததும் குழந்தையை அவரிடம் காட்டி ஆச்சரியக் கடலில் மூழ்கச் செய்யும் நேரத்தை எண்ணி எண்ணி உள்ளமும் உடலும் பூரித்தாள்.

சீமைக்குப் பயணமாகும்போது ராகவன் சீதாவைக் கான்வெண்ட் ஸ்கூலுக்கு அனுப்பச் சொல்லிப் பெற்றோர்களிடம் ஏற்பாடு செய்து விட்டுப் போனான். அதன்படி சீதா கான்வெண்ட் ஸ்கூலுக்குப் போகவில்லை என்று அறிந்ததும் அவன் மிக்கக் கோபம் கொண்டு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்துக்குப் பதிலாக அவனுடைய தகப்பனார், ''உன்னுடைய சீமந்தக் கல்யாணத்துக்கு அடுத்த மாதம் முகூர்த்தம் வைத்திருக்கிறது. உடனே புறப்பட்டு வந்து சேரவும்'' என்று எழுதினார். சீதா கான்வெண்ட் ஸ்கூலுக்குப் போகாத காரணம் இப்போது ராகவனுக்குப் புலனாயிற்று. அதனால் அவன் சந்தோஷம் அடைந்தானா, அதிருப்தி கொண்டானா என்று சொல்ல முடியாது. பதில் கடிதத்தில் பரிகாசமாக, ''சீமந்தக் கல்யாணத்தை ஆறு மாதங்கள் தள்ளி வைத்துக் கொள்ளவும்; தள்ளி வைக்க முடியாவிட்டால் பர்த்தி வைத்து நடத்தி விடவும்!'' என்று எழுதியிருந்தான். சீதாவுக்கு இந்தக் கடிதம் அளவில்லாத கோபத்தை அளித்தது. ராகவனுடைய கடிதங்களை விலை மதிப்பில்லாத பொக்கிஷத்தைப் போல் போற்றிப் பத்திரப்படுத்தும் வழக்கமுடைய சீதா மேற்படி கடிதத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்தாள். ராகவன் அவ்வாறு பரிகாசமாகப் பதில் எழுதியது பற்றி மாமியாரிடம் புகாரும் சொன்னாள்.

மாமியாரும் மருமகளும் வெகு ஒற்றுமையாகவும் அன்யோன்யமாகவும் இருந்து வந்தார்கள். ''மருமகள் மெச்சிய மாமியார் இல்லை'' என்னும் பழமொழி அவர்கள் விஷயத்தில் பொய்யாயிற்று. ''அம்மா! உங்களிடம் இருந்து குடித்தனம் செய்ய முடியாதென்று என் 'ஓர்ப்படி' பிறந்த வீட்டோடு போய் விட்டாளாமே? அவள் எவ்வளவு பெரிய ராட்சஸியா யிருக்க வேண்டும்?'' என்றாள். அக்கம் பக்கத்து வீடுகளில் தன் மாமியார் தன்னை அன்புடன் நடத்துவது பற்றிப் பெருமையுடன் சொல்லிக் கொண்டாள். காமாட்சியம்மாளின் மனோரதம் நிறைவேறி விட்டது. அந்த அம்மாள் பத்மாபுரத்தின் வீதிகளில் கம்பீரமாகப் பெருமிதத்துடன் தலை நிமிர்ந்து நடக்கத் தொடங்கினாள்.

சௌந்தர ராகவன் சீமையிலிருந்து திரும்பி வந்தான். வஸந்தியைப் பார்த்து அகமகிழ்ந்து முகமலர்ந்தான். சீதா கான்வெண்ட் ஸ்கூலுக்குப் போகாததினால் ஏற்பட்ட கோபத்தையும் மறந்தான். புதுடில்லியில் ஜாகை கிடைத்ததும் கடிதம் எழுதி அவர்களைத் தருவித்துக் கொள்வதாகச் சொல்லிவிட்டுப்

போனான். நல்ல ஜாகை கிடைப்பதற்கு இத்தனை காலம் ஆகிவிட்டது.

* * *

சீதா புது டில்லிக்கு வந்து சேர்ந்து ஒரு வாரம் ஆயிற்று; அந்த ஏழு நாட்களும் புது ஜாகை போடும் ஏற்பாடுகளில் எல்லாரும் முனைந்திருந்தார்கள். இந்த நாற்காலியை எடுத்து அந்த அறையில் போடுவது, அந்த அலமாரியைத் தூக்கி இந்த அறைக்குக் கொண்டு வருவது, கட்டில்களை மாற்றி மாற்றிப் போடுவது, சமையல் வேலைகளுக்கு ஏற்பாடு செய்வது, அம்மிக் குழவியும் கல்லுரலும் சம்பாதிப்பது, கிராமபோனும் ரேடியோவும் வைப்பது ஆகிய காரியங்களில் சதா ஈடுபட்டிருந்தார்கள். சாயங்காலம் வந்ததும் சீதா முன்போல் — அதாவது கல்யாணம் ஆனவுடனே வந்திருந்த நாட்களைப் போல் — ராகவனுடன் வெளியில் உலாவச் செல்ல வேண்டுமென்று ஆசைப்படுவாள். காரியம் அதிகமாக இருந்தபடியால் அந்த ஆசையை அடக்கிக் கொள்வாள்.

ஒரு வாரத்துக்குப் பிறகு ஒரு நாள் காலை ராகவனைப் பார்த்து, "இன்று சாயங்காலம் சீக்கிரம் ஆபீஸிலிருந்து வந்து விடுங்கள். வெளியில் எங்கேயாவது அழைத்துப் போங்கள்!" என்றாள் சீதா.

"நான் அழைத்துப் போவது என்ன? உனக்கு இஷ்டமான போது இஷ்டமான இடத்துக்குப் போய் வருவதுதானே?" என்றான் ராகவன்.

"அழகாயிருக்கிறது; நான் மட்டும் தனியாகப் போவதாக்கும்?"

"போனால் என்ன? உன்னை யாராவது வழிப்பறி செய்து கொண்டு போய் விடுவார்களா? இங்கே இன்னும் பிரிட்டிஷ் ராஜ்யம் நடக்கிறது; காங்கிரஸ் ராஜ்யம் முழுதும் வந்துவிடவில்லை!" என்றான் ராகவன்.

"என்னை ஒருவரும் கொண்டுபோய் விடமாட்டார்கள்; வாஸ்தவந்தான். ஆனாலும் தனியாகத்தான் போக வேண்டும் என்றால், நான் போகவே மாட்டேன்."

"தனியாகப் போக வேண்டாம்; உன் மாமியாரையும்கூட அழைத்துக் கொண்டு போயேன்?"

"மாமியாரை நான்கூட அழைத்துக் கொண்டு போவதற்கு உங்களுடைய அநுமதி வேண்டுமாக்கும்!" என்று சீதா பொய்க் கோபம் வருவித்துக் கொண்டு சொன்னாள்.

"சரி; சரி! கோபித்துக் கொள்ளாதே! இன்று சாயங்காலம் சீக்கிரம் வந்து உன்னை 'வாக்கிங்'க்கு அழைத்துப் போகிறேன்" என்று சொல்லிவிட்டு ராகவன் சென்றான்.

அவ்விதமே அன்று மாலை சீக்கிரமாக ராகவன் திரும்பி வந்தவன் சீதாவைப் பார்த்து, "மோட்டாரில் 'வாக்கிங்' போகலாமா? அல்லது கால்நடையாகப் போகலாமா?" என்று கேட்டான்.

வழக்கப்படி சீதா ராகவனுடைய ஹாஸ்யத்துக்காகச் சிரித்து விட்டு, "மோட்டாரில் 'வாக்கிங்' எப்படிப் போவது? நடந்தே போகலாம்!" என்றாள்.

காமாட்சியம்மாள் தான் 'வாக்கிங்' வரவில்லையென்றும் குழந்தையைப் பார்த்துக் கொள்வதாகவும் கூறினாள். சீதா விரும்பியதும் இதுதான். ஆகையால் ராகவனுடன் உல்லாசமாகக் கிளம்பினாள். இருவரும் 'கன்னாட் சர்க்கஸ்'ஸுக்கு வந்து ஒரு தடவை சுற்றிப் பார்த்து விட்டு, 'இந்தியா கேட்'டை நோக்கிச் சென்றார்கள்.

இந்தியா கேட்டுக்குப் பக்கத்தில் உள்ள செயற்கை நீர் ஓடைகளில் ஒன்றுக்கு அருகில் பச்சைப் பசும்புல் தரையில் உட்கார்ந்திருந்தார்கள். அப்போது சூரியன் அஸ்தமித்து இருள் சூழ்ந்து வரும் சமயம். நாலு திசைகளிலும் வரிசை வரிசையாக வானத்து நட்சத்திரங்களுடன் போட்டியிட்டுக்கொண்டு இந்தியத் தலைநகரின் மின்சாரத் தீபங்கள் பிரகாசித்தன.

"கந்தர்வ லோகம் என்று சொல்கிறார்களே! அந்தக் கந்தர்வலோகம் இதைவிடவா அழகாயிருக்கும்?" என்றாள் சீதா.

"நான் கந்தர்வ லோகத்துக்குப் போனதில்லை; அதனால் இரண்டையும் ஒப்பிட்டுச் சொல்லத் தெரியவில்லை" என்றான் ராகவன்.

சீதா சிரித்துக் கொண்டே, "நானும் கந்தர்வ லோகத்துக்குப் போனதில்லை; ஆனால், கந்தர்வலோகத்தைப் பற்றிப் பாரதியார் 'ஞான ரதம்' என்ற புத்தகத்தில் வர்ணித்திருப்பதைப் படித்திருக்கிறேன். புது டில்லியைவிடக் கந்தர்வ லோகம் அப்படி ஒன்றும் ஓசத்தியில்லை யென்று எனக்குத் தோன்றுகிறது!" என்றாள்.

"நான் 'ஞான ரத'த்திலும் ஏறினதில்லை; அதனால் அபிப்பிராயம் சொல்ல முடியாது" என்றான் ராகவன்.

"ஞான ரதம் வெறும் கற்பனை ரதம். ஆனால் நீங்கள் வான ரதத்தில் ஏறி ஆகாசத்தில் பறந்திருக்கிறீர்கள். ஞான ரதத்தைப் போல் கந்தர்வ லோகமும் கற்பனை லோகந்தான். நீங்களோ லண்டன், பாரிஸ் முதலிய உண்மை

நகரங்களுக் கெல்லாம் போயிருக்கிறீர்கள். ஏன்னு? புது டில்லியை விட லண்டனும் பாரிஸும் அழகு தானே?'' என்று சீதா கேட்டாள்.

'''ஏன்னு' என்று இனிமேல் என்னை அழைப்பதில்லையென்று நீ சபதம் செய்தால் உன் கேள்விக்குப் பதில் சொல்கிறேன்'' என்றான் ராகவன்.

''ஆகட்டும்; இனிமேல் 'ஏன்னு' என்கவில்லை. 'ஏன் ஸார்?' என்கிறேன். லண்டன் அழகா, டில்லி அழகா? ஏன், ஸார்?'' என்றாள் சீதா.

''லண்டன் ஒருவிதத்தில் அழகு; டில்லி இன்னொரு விதத்தில் அழகு'' என்றான் ராகவன்.

சீதாவுடன் பேசிக் கொண்டிருந்தபோது ராகவனுடைய கண்கள் அங்குமிங்கும் சுழன்று பார்த்துக் கொண்டிருந்தன. ஒரு சமயம் சாலையோடு இரண்டு பெண்கள் நடந்து போனார்கள். சாய்ந்து படுத்திருந்த ராகவன் சட்டென்று எழுந்து உட்கார்ந்து அவர்களை உற்றுப் பார்த்தான். மறுபடியும் புல் தரையில் சாய்ந்து கொண்டான்.

தில்லி ரயில்வே ஸ்டேஷனில் நடந்த சம்பவம் சீதாவுக்கு ஞாபகம் வந்தது.

''ஏன் ஸார்! அன்றைக்கு ரயில்வே ஸ்டேஷனில் யாரோ ஒருத்தியைப் பார்த்துப் பேசினீர்களே? அவள் யார்?'' என்று சீதா கேட்டாள்.

'' அவள் யாராயிருந்தால் உனக்கென்ன ?'' என்று ராகவன் கேட்ட குரலில் கடுமை தொனித்தது.

''யார் என்று சொன்னால் என்ன?''

''சொல்ல முடியாது.''

'' ஏன் சொல்ல முடியாது ?''

''எனக்கு இந்த ஊரில் எத்தனையோ பேரைத் தெரியும். அவர்களையெல்லாம் யார் யார் என்று உனக்குச் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா ?''

'' உங்களுக்குத் தெரிந்தவர்களையெல்லாம் எனக்கும் தெரிந்திருக்க வேண்டியது தானே ?''

'' உனக்குத் தெரிய வேண்டிய விஷயங்கள் தெரிந்தால் போதும். ஊரில் உள்ளவர்களையெல்லாம் தெரிந்திருக்க வேண்டியதில்லை.''

பொங்கி வந்த கோபத்தைச் சீதா அடக்கிக் கொண்டாள்.

சற்று நேரம் இருவரும் மௌனமாயிருந்தார்கள்.

''ஏன் ஸார்? அவள் யார் என்று சொல்ல மாட்டீர்களா!''

மௌனம்.

''அவள் உங்களோடு காலேஜில் படித்தவளா?''

மௌனம்.

''நம்ம பக்கத்து மனுஷியா ? இந்த ஊர்க்காரியா?''

மௌனம்.

''என்னோடு ஏன் பேசப் போகிறீர்கள்? இதற்காகத்தான் 'வாக்கிங்' அழைத்து வந்தீர்களாக்கும்?'' என்று கூறிய சீதாவின் கண்களில் கண்ணீர் ததும்பியது.

''இதற்குத்தான் அழைத்து வர மாட்டேன் என்று சொன்னேன். பெண்களின் சுபாவத்தைக் காட்ட ஆரம்பித்து விட்டாயல்லவா ? சனியன் !'' என்று சொல்லிக் கொண்டே ராகவன் பசும் புல் தரையிலிருந்து எழுந்தான்.

நான் ஒன்றும் சனியன் இல்லை'' என்று சீதா கூறி இன்னும் முணுமுணுத்தாள்.

சீதாவின் குற்றமற்ற இளம் உள்ளத்தில் துன்பத்தின் வித்து விதைத்தாகிவிட்டது. அது முளைத்து வளர்ந்து மரமாகி என்னென்ன பலன்களைத் தரப் போகிறதோ, யார் கண்டது? (தொடரும்)



அழகு முகம்
ஒவ்வொன்றுக்குள்ளும்
அழகு ரகசியம்
ஒன்று ஒளிந்திருக்கிறது




# அதுவே
# எழில் பராமரிப்பு ரகசியம்

உங்கள் நோக்கம் அழகாகத் தோற்றமளிப்பது. உங்கள் சருமத்தை அதற்கேற்ப வைத்திருப்பது க்ரூக்ஸ் லாக்டோ-காலமைன் வேலை— துல்லியமாக, புதுமையுடன், கவர்ச்சி மெருகுடன் வைத்திருப்பது. இவ்வளவு அனுபாசமாக சருமத்தை இவ்வளவு அழகாகப் பேணிப் பராமரிப்பது வேறெதுவுமில்லை. காலையிலும், மாலையிலும் கடைசியாக இரவில் படுக்கப் போவதற்கு முன்பும் க்ரூக்ஸ் லாக்டோ-காலமைன் உபயோகியுங்கள். உங்கள் சருமம் எப்படி அழகாகத் திகழ்கிறது என்று பாருங்கள்.

க்ரூக்ஸ்
## லாக்டோ-காலமைன்

டு:பார்-இன்டர்:ப்ரான் லிமிடெட், பம்பாய்-18



# லட்சுமி கடாக்ஷம்

மயிலை மூர்த்தி

"ஜானகி! கண்டுபிடிச்சுட்டேன். பிரச்னையெல்லாம் தீர்ந்தன." — ராகவன் கண்கள் பிரகாசித்தன.

"என்னத்தையடா, கண்டுபிடிச்சே? வரவா, அல்லது செலவா?" — ஸ்தோத்திரப் புத்தகத்திலிருந்து பார்வையை எடுத்த ராகவனின் தாயார், தன் மகனையே உற்று நோக்கினாள். குழந்தைகள் விளையாட்டை நிறுத்தி விட்டு ராகவனை நெருங்கின. ஜானகி, இருந்த இடத்திலிருந்தே ரேடியோவை மூடினாள்.

"செலவு: பிறகு வரவு! இரண்டும்தான்!" எல்லோரையும் ஒரு முறை பார்த்தார் ராகவன்.

"ஒரு பசு மாடு வாங்கிடலாம்னு இருக்கேன், அம்மா!"

ஒரு விநாடி மௌனத்தைத் தொடர்ந்து, பானுவும் கலாவும் ஒரே துள்ளாகத் துள்ளிக் கொண்டு வெளியே ஓடினர். "ஹை, நம் வீட்டில் மாடு வரப் போறது." வாசல் வரையில் இதே குரல்தான்.

"நல்ல யோசனை. இப்போதான் சொந்தத்தில் வீடு கட்டியாகிவிட்டது. வீட்டுக்குப் பசு மாடு வந்தாலே லட்சுமி கடாட்சம் என்பார்கள். ம்...நல்லவேளை வந்தால் எல்லாம் தானாகவே வந்து சேரும். வீட்டுக்குப் பின்னால் நிறைய இடம் இருக்கு. ஒரு கொட்டகை கட்டி மாட்டை அங்கே கட்டிப் போட்டுவிடலாம்." — ராகவனின் தாயார் பேசிக் கொண்டே போனாள்.

திட்டத்தைச் செயலாக்குவதில் முனைந்தார் ராகவன். பால்கார மாரியப்பனை அழைத்து விஷயத்தைத் தெரிவித்ததும், அவன் தலையைப் பலமாக ஆட்டினான்.

"வாங்கிப்புடலாமுங்க. எனக்குத் தெரிஞ்ச பால்காரன் ஒருத்தன் டவுனிலே அருமையான பசு ஒண்ணு வைச்சிருக்கான். மாட்டைப் பார்த்தீங்கன்னு கம்மா ரிஷபம் மாதிரி, அப்படியே மயங்கிடுவீங்க. நாளைக்கே போய் அழைச்சுக்கிட்டு வந்துடறேன்."

"விலை எப்படியப்பா?"

"அதெல்லாம் கவலைப்படாதீங்க. சௌகரியமா முடிச்சுத் தரேன். நம்ம வீட்டுக்கு ஒரு பசு இருந்தாத்தாங்க அழகு. நானே சொல்லணும்னு நெனைச்சேன்." — மாரியப்பன் கிளம்பிவிட்டான்.

அடுத்த வாரத்தில் வீட்டின் பின்புறம் மாடு கட்டும் கொட்டகை ஒன்று போடப்பட்டது. மாட்டுக்குத் தேவையான பொட்டு, தவிடு, புண்ணாக்கு — எல்லாம் வகைக்கு ஒரு மூட்டையாக வாங்கப்பட்டன.

அடுத்த ஞாயிற்றுக்கிழமை. கேட்டைத் திறந்து உள்ளே நுழைந்த மாரியப்பனைத் தொடர்ந்து ஆந்திரக்காரர் ஒருவர் வந்தார். அவருக்குப் பின்னால் சாதுவான பசு ஒன்றும் வந்தது. வெள்ளை வெளேர் என்று நிறம். சீவி விடப்பட்ட கொம்புகள். ரிஷபம்

மாதிரிதான் இருந்தது. மாரியப்பன் சொன்னதில் சந்தேகமே இல்லை. ராகவனின் தாயார் கொஞ்சம் மஞ்சள் தூளையும் குங்குமத்தையும் அதன் முகத்தில் அப்பி அதை ஒரு முறை வலம் வந்தாள்.

"பின்னால் அழைத்துச் சென்று கொட்டிலில் கட்டிவிட்டு வாப்பா" என்றார் ராகவன்.

மாரியப்பனும் ஆந்திரக்காரரும் மாட்டை அழைத்துச் சென்றனர். சற்று நேரத்தில் மாரியப்பன் கையில் பால் குவளையுடன் திரும்பினான். "அளந்து பாருங்க சார்! பக்கா ரெண்டு படிக்குக் குறையாது. ஒரு நாளைக்கு ரெண்டு வேளை கறக்கும்." — ஜானகி பால் பாத்திரத்தை உள்ளே எடுத்துச் சென்றாள்.

"அப்புறம்; விலையைச் சொல்லுப்பா" என்றார் ராகவன், தெலுங்குக்காரரைப் பார்த்து.

மாரியப்பன் தெலுங்குக்காரரைத் தனியே அழைத்துச் சென்று ஏதேதோ பேசினான். சற்று நேரத்தில் இருவரும் திரும்பினர்.

"சார்! ஒரு வழியாக முந்நூற்று ஐம்பதுக்குச் சம்மதிக்க வைச்சுட்டேன் சார். உங்களுக்கு ஒரு ரகசியம் சொல்றேன். மாடு நல்ல ஜாதி மாடு. கண்ணை மூடிக்கிட்டுப் பணத்தைக் கொடுக்கலாம். அதோட ராசியை இனிமேல்தான் பார்க்கப் போறீங்க." — ரகசியத்தைப் பலமாகவே சொல்லி முடித்தான் மாரியப்பன். உள்ளே சென்ற ராகவன் சற்று நேரத்தில் பணத்துடன் திரும்பினார்.

அன்று மாலை மாரியப்பனே வந்து பாலைக் கறந்து கொடுத்துவிட்டுப் போனான். அளந்து பார்த்ததில் ஒரு படிதான் தேறியது.

"புது இடங்க, மாடு மிரளுது. நாளைக்குச் சரியாய்ப் போயிடும், பாருங்க." — தன் கையாலேயே நிறைய வைக்கோலை அள்ளிப் போட்டுவிட்டு வெளியே கிளம்பினான் மாரியப்பன். ஜானகி பருத்திக் கொட்டையை அரைத்துக் கொண்டிருந்தாள்.

அன்று இரவு; குழந்தைகள் பெரியவர்கள் எல்லோருக்கும் சூடான சுவையான பசும் பால் கிடைத்தது.

"ஏண்டா ராகவா! நம் வீட்டுக்கு இவ்வளவு பால் எதற்கு? ஒரு படி போக மீதியை நாலு வீடுகளுக்குக் கொடுத்துவிட்டால், பணமும் கிடைக்கும். மாட்டுக்கு வேண்டியதை வாங்கலாமே?"

"யாரும்மா, வாங்குவார்கள்? இந்த இடத்தில் இன்னும் ஒருவரும் சரியாக வீடே கட்டி முடிக்கவில்லை. அதற்குள் எப்படி....?"

"அந்தக் கவலைகள் உனக்கு வேண்டாம். நம் வீட்டின் பக்கத்திலுள்ள நாலு வீட்டிலும் சொல்லி வைத்துவிட்டேன். அவர்களுக்கெல்லாம் எவ்வளவு சந்தோஷம் தெரியுமா ?"

ஒரு நாளைக்குக் குறைந்தது இரண்டு படி கறந்த பால் வியாபாரம்; ஆறு ரூபாயாவது தேறும். மூன்று ரூபாய் மாட்டுக்காகச் செலவழித்துவிட்டால், மூன்று ரூபாய் மீதம். மாதம் தொண்ணூறு ரூபாய் — ராகவன் மனத்துக்குள் கணக்குப் போட்டுப் பார்த்தார். அந்த மகிழ்ச்சியிலேயே உறக்கம் அவரை ஆட்கொண்டது.

மறு நாள் காலை; மாரியப்பன் வரவில்லை. ராகவனே பால் கறப்பதற்கான ஆயத்தங்கள் செய்தார். இந்த மாட்டுக்குக் கன்றுக்குட்டி பிரச்னையே கிடையாது. ஆந்திரக்காரர் கொடுத்துவிட்டுப் போயிருந்த, சுவரில் மாட்டியிருந்த அந்த வைக்கோல் திணிக்கப்பட்ட கன்றுக்குட்டியை எடுத்து மிகவும் சிரமப்பட்டு மாட்டின் முன்னால் வைத்தார் ராகவன். மாடு சாவதானமாகக் கன்றுக் குட்டியை நக்கிக் கொடுத்து, அதனுள்ளே திணிக்கப்பட்டிருந்த வைக்கோலை, ஒவ்வொன்றாக வெளியே இழுத்து, சுவைத்துத்




"ஜெயப்பிரகாஷிடம் சரணடைந்தார்களாம் வடக்கே கொள்ளைக்காரர்கள். அதுபோல, நானும் உங்களிடம் சரணடைகிறேன்!"

"அடேடே! ஏது நல்ல புத்தி?"

"எங்களுக்கு வாழ்க்கையான இடத்திலெல்லாம் பகலில் வருமான வரி அதிகாரிகள் நுழைந்து விடுகிறார்கள்; பிறகு எங்களுக்கு எங்கே வேலை?"

"மாங்காய் குழம்பு, மாங்காய் பச்சடி, மாங்காய் கூட்டு, மாங்காய் தொக்கு, மாங்காய் ஊறுகாய் என்று ஜமாய்த்திருக்கிறீங்களே! பக்கத்து வீட்டு மாமரம் காய்க்க ஆரம்பித்து விட்டதா?"





## மஞ்சள் காமாலைக்கு மருந்து

பாக்கு அளவு புளியைக் கரைத்து வடிகட்டி ஒரு கண்டைக்காய் அளவு கண்ணும்பைக் கரைத்து, காலை, பகல், மாலை தினம் மூன்று வேளை சாப்பிடவும். அதற்கு மேலே சுத்த நீரை அருந்தவும். எவ்வித பத்தியமுமில்லை. அதிக காரம், புளி, உப்பு குறைத்து, பால், தயிர் அதிகம் உட்கொள்ளவும். இப்படி செய்தால் மஞ்சள் காமாலை குணமாகிறது என்கிறார் திருவொற்றியூர் காந்தி மருத்துவமனை டாக்டர் 'பண்டிட் பி. வி. சர்மாஜி.

தின்ன ஆரம்பித்தது. அந்த வாயில்லா ஜீவனை இப்படி ஏமாற்றி அந்தப் பாலைக் கறக்கத்தான் வேண்டுமா ? கைகள் பாலைக் கறக்க ராகவன் கண்களிலிருந்து நீர் தானே கசிந்தது.

அன்று வீட்டுச் செலவுக்குப் போக மீதி ஒரு படிதான் இருந்தது. முதல் வீட்டுக்கே தினம் ஒரு படி கொடுப்பதாகப் பேச்சு. ராகவனின் தாயார் முதல் நாளே தகராறு வேண்டாம் என்று நான்கு வீடுகளுக்கும் சமமாகப் பிரித்துக் கொடுத்து அனுப்பினான்.

மறு நாள்; அடுத்த நாள்; மாட்டுக்கு வேண்டிய தீனிகளை, பத்திரிகைகளில் விளம்பரம் வந்த எல்லாவற்றையும், வாங்கி வர ஆரம்பித்தார் ராகவன். ஒவ்வொரு நாளும் பருத்திக் கொட்டை, தவிட்டுடன், தாம் வாங்கி வந்த தீவனத்தையும் கலந்து வைத்துப் பார்த்தார் அவர். மாடு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு எதற்காகவோ பரிதாபமாக ஏங்கியது. நிச்சயமாக அதனுடைய முதலாளி, ஆந்திரக்காரரைப் பிரிந்த ஏக்கமாக இருக்க முடியாது. பின் அதன் கண்களில் நீர் வடிந்ததன் காரணம் ? உணவுப் பழக்கத்தை மாற்றியதையே அது அதற்கு அளிக்கப்பட்ட தண்டனையாக நினைத்தது என்பதை உணர்ந்தார் ராகவன். அவர் மனம் வேதனை அடைந்தது.

மாடு வந்து ஒரு வாரம் ஓடியே விட்டது. அன்று காலை ராகவன் எழுந்திருப்பதற்குச் சற்று நேரமாகிவிட்டது. வழக்கமான உபகரணங்களுடன், பாத்திரத்துடன் மாட்டின் அருகில் அமர்ந்து, பாலைக் கறக்க ஆரம்பித்தார். பின்னங்காலால் எட்டி ஓர் உதை விட்டது. ராகவன் கையிலிருந்த பாத்திரம் எகிறிச் சென்று விழுந்தது. ராகவன் துண்டால் முகத்தை மூடியவாறு உள்ளே வந்தார். நல்ல காலம்; பற்களெல்லாம் பத்திரமாக இருந்தன. ஆனால் மூக்குக்கு மேல் நன்றாக வீங்கிப்போய் விட்டது.

ராகவன் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டார், எந்த ஒரு மாட்டை வாங்கினாலும், அதற்கான பழக்க வழக்கங்களை மாற்றவே முடியாது என்று. மனிதர்களைப் போல் மாடுகளும் அந்தந்தப் பழக்கவழக்கங்களுக்கு அடிமையானவை.

அன்று சரியாக மாட்டைக் கட்டவில்லை. எப்படியோ கொட்டிலைவிட்டு வெளியேறிய அந்தப் பசு, நான்கு 'பிளாட்'களுக்கு அப்பால் ஒரு வீட்டின் கீரைப் பாத்தியை நன்றாக மேய்ந்துவிட்டு, துரத்தி வந்த அந்த வீட்டுச் சிறுவனைக் கொம்பால் தூக்கி முள் வேலிக்கு அப்பால் எறிந்துவிட்டது. எட்டிச் சென்று விழுந்த சிறுவனுக்கு உடல் முழுதும் நல்ல அடி. அவர்கள் கொடுத்த ரிப்போர்ட்டின் பேரில் ராகவனுக்குப் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து அழைப்பு வந்தது. நல்ல காலம், பையன் பிழைத்துவிட்டான்; ராகவனுக்கு அபராதத்துடன் போயிற்று.

மறு நாள் காலை. மாரியப்பன் வந்தான். ராகவன் அவனிடம் மெல்லத் தம் தீர்மானத்தை வெளியிட்டார்.

''எம்பா, டவுன்லே உன் நண்பர், அந்த ஆந்திரக்காரரைப் பார்த்து இந்த மாட்டை அழைத்துப் போகச் சொல்லு அப்பா. என் பணத்தையும் வாங்கிக் கொடுத்துவிடு.''

''அந்த ஆள் எங்கேயிருக்காரோ? அவங்கள்ளாம் வியாபாரிங்க சார். மாட்டை வாங்கி விற்கிறதுதான் அவங்க பொழைப்பு. அவனை எங்கே பார்ப்பது ?'' — வாங்கும் போது என் நண்பர் என்ற ஆந்திரக்காரரை, இப்போது அவன், இவன் என்று கூற ஆரம்பித்துவிட்டான் மாரியப்பன்.

ராகவன் சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்தார். '' சரியப்பா, நீயே மாட்டை ஓட்டிக்கிட்டுப் போயிடு. அந்த ஆள் கிடைக்காவிட்டால் வேறு யாரிடமாவது விற்று, பணத்தை மட்டும் என்னிடம் கொண்டு வந்து கொடுத்துவிடு.''

'' சரிங்க; ஐயாவுக்கு ஒத்து வரல்லேன்னு அதை உடனே தொலைச்சுப்புடறதுதாங்க சரி. பணத்தைப் பத்திக் கவலைப்படாதீங்க.'' மாட்டை அழைத்துக் கொண்டு மாரியப்பன் கிளம்பி விட்டான்.

ஒரு வாரம் ஓடியேவிட்டது.

மாரியப்பன்தான் தொடர்ந்து அந்த வீட்டுக்குப் பால் ஊற்றினான். இப்போதெல்லாம் பாலைப் பற்றி ஒருவரும் புகார் செய்வதில்லை. ராகவன் பணத்தைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தார். மாரியப்பன் என்றாவது ஒரு நாள் பணத்துடன் வருவான் என்ற நம்பிக்கையில், அவனுடன் தகராறு எதுவும் செய்யாமல் இருந்தார் அவர்.

ஆனால் மாரியப்பனுக்குத்தான் லக்ஷ்மி கடாட்சம் பரிபூரணமாக இருந்தது. ஆம், இவ்வளவு நாட்கள் அவர்கள் வீட்டில் இருந்தது மாரியப்பனுடைய மாடுதான் என்பதும், ஆந்திரக்காரர் உதவியுடன் அதை விற்பது போல் நடித்து, தன்னுடைய மாட்டையே முந்நூற்று ஐம்பது ரூபாய்க்கு விற்றுவிட்டு, மறுபடியும் அரை விலைக்காவது விற்றுத் தருவதாக, தன் மாட்டையே திரும்பவும் ஓட்டிக் கொண்டு வந்துவிட்டான் என்ற உண்மை யாருக்குத் தெரியப் போகிறது?

## நினைத்த உடன் தயார்
## — இனி, மேலே வாசியுங்கள்!

## ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்
## 'திடீரெக்ஸ்'

Dhideerex




திடீர் (Registered)

### திடீர் அரிசி இட்லி கேக்

—கொதிக்கும் தண்ணீரிலோ சாம்பாரிலோ ஒரு நிமிஷம் ஊற வைத்தால் இட்லி தயார்.

### திடீர் சாதம்
### (Instant Cooked Rice)

கொதிக்கும் தண்ணீரில் சில நிமிஷம் போட்டு வைத்தால் தயார்.

இந்த சாதத்தில் சிறிது புளியோதரை பவுடர், உப்பு, நல்லெண்ணெயும் கலந்தால் புளியோதரை ரெடி.

மேற்படி சாதத்தில் பருப்பு பொடியும் நெய்யும் கலந்தால் பருப்பு சாதம் தயார்.

தயிர் சேர்த்தால் தயிர் சாதம்.

### திடீர் வெஜிடபிள் பிரிஞ்சி

—கொதிக்கும் தண்ணீரில் சிறிது நேரம் வைத்திருந்து, அதற்கு அளவான உடனிருக்கும் பவுடரையும் சிறிது நெய்யும் கலந்தால் ரெடி.

### திடீர் அரிசி சேவை (சேமியா) மிக்ஸ்

கொதிக்கும் தண்ணீரில் கலந்தால் ரெடி.

குறிப்பு: மேற்சொன்ன தயாரிப்புகளனைத்தும் அசல் தயாரிப்புகளுக்கு ஈடான ருசியுடன் இருப்பது நிச்சயம்.

**எமது முக்கிய ஸ்பெஷல் தயாரிப்பு வெஜிடபிள் பிரிஞ்சி தயாரிப்பது வெகு சுலபம்!**

— தயாரிப்பாளர்கள் —

M/s. R. S. N. அய்யர் & R. S. G. அய்யர்

— உரிமையாளர்கள் —

**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.**

(போன்: 20401 — PBX. 3 லைன்கள்)

46, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

தயாரிப்பு முறைகளின் உருவாக்கியவர்கள்:

ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்
அனலிட்டிக்கல் லேபரட்டரீஸ், சென்னை-1



பரோடா, ஜியோதி கலர் எமக் லிட்., ஸ்தாபனத்தின் ஜெனரல்மானேஜர் ஸ்ரீ எஸ். கே. ஸ்வாமி அவர்களின் குமாரத்தி சௌ. பிரதிமாவுக்கும், ஸ்ரீ வி. எஸ். நடராஜன் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி வசந்த் குமாருக்கும் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. நகரப் பிரமுகர்கள் பலர் கலந்து கொண்டனர். - வாழ்க மணமக்கள்

## தீராத வியாதிகளுக்கு சிறந்த சித்த வைத்தியம்



தவறான பழக்கத்தினால் இல்லற வாழ்க்கையில் திருப்தி இல்லாத நிலைமை, மலட்டுத் தன்மை, களைப்பு, உப்புசம், தோல் சம்பந்தப்பட்ட வியாதிகள் வயிற்றுவலி, காதுமந்தம், முதலியவைகளுக்குத் தபால் மூலம் சிகிச்சை அளிக்கப்படும்.

## ஸ்ரீ பாலாஜி வைத்தியசாலை

டாக்டர்

**பி. குமாரஸ்வாமி தேவரா**

தெனலி (A. P.) போன்: 551

— சென்னை கிளை —

9-D, சிவாஜி தெரு,
தி. நகர், சென்னை-17




HLT 5471A

உங்களைச் சுற்றிலும்
சந்தனத்தின்
நறுமணம் கமழட்டும்

மலாய் சந்தன சோப்பும்
டால்கம் பவுடரும்
நாள் எல்லாம்
உங்களை எழிலுடனும்
நறுமணத்துடனும்
திகழச் செய்ய
மிகப் பொருத்தமான
ஒரு ஜோடி

இந்த சந்தன சோப்பு - குளிர்ச்சியானது மிருதுவானது, சுகமானது. உங்களது சருமத்துக்கு எழிலூட்டுவது. இந்த சந்தனப் பவுடர் - மிருதுவானது. புத்துணர்ச்சியூட்டுவது. இந்த சோப்பையும் பவுடரையும் உபயோகித்தால் வியர்வை கொட்டும் ஒரு வெப்பமான நாளிலுங்கூட நீங்கள் சந்தனத்தின் தன்னிகரில்லாத நறுமணம்கமழ எழிலுடனும் தூய்மை உணர்ச்சியுடனும் இருப்பீர்கள்

கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெடின் தயாரிப்புகள்.

## 15. அழகுராணி



**ஹா**ப்பி ஹாலிடே ஹோட்டலில் சிறுவர்களுக்கென ஒரு சிறிய விளையாட்டுத் திடல் இருந்தது. பசும் புல்வெளி, ஒன்றிரண்டு நிழல்தரு மரங்கள். சிறுவர்கள் மிதித்துப் பாழடித்துவிடுவார்கள் என்ற எண்ணத்தில்தானோ என்னவோ அந்த இடத்தில் மலர்ச்செடிகள் எதுவும் பயிராக்கப்படவில்லை. இரண்டு 'ஸீ—ஸா'க்கள், மூன்று ஊஞ்சல்கள், ஒரு சறுக்கு மரம் — இவை அந்த விளையாட்டு மைதானத்தில் இருந்தன. அந்த நேரத்தில் அங்கு அனசூயாவையும் விசுவநாதனையும் தவிர, வேறு குழந்தைகள் இல்லை. அவ்விருவரும் 'ஸீஸா' ஆடிக் கொண்டிருந்தார்கள். சம எடை

# "ஸைக்கோ ஸாரநாதன்"

உள்ளவர்கள்தாம் 'ஸீ—ஸா' நன்றாக ஆட முடியும். விசுவின் எடையைவிட அனசூயாவின் எடை கூடுதலாக இருந்தபடியால் அவள் இருந்த பக்கத்தை விசு எவ்வளவோ முயன்றும் உயர்த்த முடியவில்லை. இதனால் இருவருக்கும் இடையில் வாக்குவாதம் முற்றியது.

சமாதானம் செய்விக்கப் பக்கத்தில் இருந்த மீனு சிறிது நேரம் முயன்று கடைசியில் அலுத்துப் போகவே அவ்விடம் விட்டு அகன்றாள். சற்றுத் தொலைவில் இருந்த சறுக்கு மரம் நோக்கி அவள் கால்கள் அவளை இட்டுச் சென்றன. ஏணியின் எதிர்ப்புறம் சறுக்கு மரத்தின் சரிவான பகுதி அருகே நின்றவள், திடும்மென்று நினைத்துக் கொண்டவளாய் அதில் முதுகைப் பதித்து ஒய்யாரமாய்ச்

**கி. ராஜேந்திரன்**

சாய்ந்து கொண்டாள். சறுக்கு மரம் விளையாடிய குழந்தைகளின் பாதங்கள் மீண்டும் மீண்டும் பாய்ந்து வந்து தாக்கியதால் குழி விழுந்திருந்த பூமியில் கால்களை நன்றாக ஊன்றிக் கொண்டு நாற்பது டிகிரி கோணத்தில் படுத்திருப்பது அலாதியானதொரு சுகானுபவமாக இருந்தது. மரநிழல் பரவியிருந்த அந்த இடத்தில் மற்றப் பகுதிகளைக் காட்டிலும் சில்லிப்பு கூடுதலாகத்தான் இருந்தது. கதகதப்பை விரும்பியவளாகத் தன்னைத் தானே தழுவிக்கொள்ளும் விதத்தில் முழங் கைகளை மடித்துத் தோள்களைக் கொக்கி போட்டாற்போல் விரல்களால் பற்றிக் கொண்டாள். ஊசி இலைகளுடன் கூடிய ஒரு மரத்தின் இடுக்குகள் வழியே சூரியஒளி நூற்றுக் கணக்கான மத்தாப்பூப் பொறிகளாக அவள் கண்களுக்குத் தென்பட்டது. திடுமெனச் சில பொறிகள் மறைவதும் புதிதாகப் பல பளிச்சிடுவதுமாக மரத்தில் ஒரு மாயாஜாலம் •நிகழ்ந்து கொண்டிருந்தது.. கடந்த சில நாட்களாகவே நிலவிய கருகருப்பற்ற வாழ்க்கையும் ஒவ்வொரு வேளையும் சுவையான பலமான விருந்தாக அமைந்த ஹோட்டல் சாப்பாடும் மீனுவிடம் ஒரு மதமதர்ப்பை வளர்த்து விட்டிருந்தன. இப்போதுகூடக் காலைச் சூரியனின் ஒளிச் சிதறல்களைப்



பார்க்கும்போது கண்கள் கூசாவிட்டாலும் இமைகளை மூடிக் கொண்டு பகற் கனவு காண வேண்டும் போலிருந்தது அவளுக்கு. அந்த ஆசைக்கு அடிமையாகி அவள் விழிகளை மூடியதும் உடனே வெகு சுலபமாக ரங்கநாதனைத் தன் அருகில் வரவழைத்துக் கொள்ள முடிவதை உணர்ந்தாள்.

சற்று நேரத்தில் விசு அழைக்கும் குரல் கேட்டது: ''ரங்கன் மாமா! ஸீஸாவை இந்தப் பக்கம் கொஞ்சம் அழுத்துங்கோ, ப்ளீஸ்!''

அனசூயா உடனே போட்டிக் குரல் எழுப்பினாள்: ''அழுத்தாதீங்கோ மாமா!''

''நான் ரெண்டு பேருக்கும் 'ஹெல்ப் பண்ணறேன், நடுவிலே நின்னுக்கிட்டு' என்றான் ரங்கன்.

கற்பனையில் தான் காண முற்பட்ட ரங்கன் நிஜமாகவே பக்கத்தில் வந்துவிட்டார். ஆனால் அந்தக் கற்பனை ரங்கனுக்கும் இந்த அசல் ரங்கனுக்கும் எவ்வளவு வித்தியாசம்!

'கற்பனை ரங்கன் என்னைக் கண்டதும் நேரே என்னிடமே ஓட்டமாக ஓடி வருகிறார். ஆனால் இவர் என்னடாவென்றால் என் தம்பி, தங்கையுடன் விளையாடப் போய்விட்டார்! அந்த உண்மை ரங்கன் 'ஸீ-ஸா'வை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக ஆட்டியபடி விசுவையும், அனுவையும்தான் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருக்கிறார். கற்பனை ரங்கன் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள்ள முடியாமல் திணறிக் கடைசியில் வந்தது வரட்டும் என்று துணிந்து என் முகத்தைத் தம் இரு கைகளாலும் அள்ளுகிறார். ஆனால் அசல் ரங்கனுடைய கரங்கள் விசுவைத்தான் கட்டி அணைத்துத் தூக்குகின்றன. கற்பனையில் ரங்கன் குனிந்து இலேசாக இதழோடு இதழ் பதிக்க முற்படுகிறார். ஆனால் கண்ணுக்கு மெய்யான ரங்கன் விசுவின் கன்னத்தில் பெரிதாக ஓசைப்படுத்தி முத்தமிடுகிறார். அனசூயாவின் பொறுமையை உணர்ந்தவராய் அவளுடனும் விளையாடத் திரும்புகிறார்.'

நல்லவேளை! கற்பனையில் நாம் கண்டது போல் ரங்கன் நடந்துகொள்ளவில்லை என்ற நிம்மதி ஒரு பக்கமும் நாம் கற்பனை செய்ததுபோல் ரங்கன் நடந்து கொள்ளவில்லையே என்ற ஏக்கம் ஒரு புறமும் மீனுவின் உள்ளத்தில் 'ஸீ-ஸா' ஆட அவள் நிமிர்ந்தெழுந்தாள்.



ரங்கன் தற்போது என்னை நெருங்கித் தரையில் மண்டியிட்டு அமர்ந்து ஒய்யாரமாகச் சாய்ந்து கிடக்கும் என் உடலை ஆர்வத்தோடு உச்சந் தலைமுதல் உள்ளங் கால்வரை பார்க்கிறார். 'எத்தனை பார்த்தாலும் தாகம் தணியாமல் என் தேகம் முழுவதும் ஒரு கிளுகிளுப்புப் பரவும் விதமாகக் கண்களால் ரசிக்கிறார். ஆனால்

அப்போதுதான் அவனைக் கவனித்த வன் போல், "அடடே! நீதான் இங்கே இருக்கிறாயா? நான் பிட்டூனியா மலர்களுக்கிடையில் ஒரு டாலியா பெரிதாகப் பூத்திருக்கிறதாக்கும் என்று நினைத்தேன்" என்றான் ரங்கன்.

மீனாவின் முகம் குப்பென்று சிவந்தது. ஏற்கெனவே சீதோஷ்ண நிலையினால் சிவப்பேறி யிருந்த கன்னங்கள் இப்போது ப்ளம் பழங்களாயின. தன் காதலன் தனக்கு ஏமாற்றமும் அளிக்காமல் அதே சமயம் வரம்பு மீறியும் நடந்து கொள்ளாமல் இருப்பதில் அவளுக்குப் பெருமித உணர்வும் தோன்றியது. அவன் குறிப்பிட்டது என்ன என்பது அவளுக்குப் புரியாமல் போகவில்லை. அவள் அணிந்திருந்த இளம் நீல நிற காலி-ஸிந்த் புடவையில் வெள்ளை, ரோஸ், மஞ்சள் ஆகிய நிறங்களில் ஏராளமான சிறிய பூக்கள் அள்ளித் தெளித்தாற் போல் அச்சிடப்பட்டிருந்தன. அவற்றைத்தான் சிறிய பிட்டூனியா மலர்ப் படுகை என்று அவன் வர்ணித்தான். அதன் இடையில் பெரிதாகப் பூத்திருந்த டாலியா மலராக அவள் முகத்தைத்தான் அவன் ஒப்பிட்டுச் சொன்னான்.

அவளுக்கு என்ன பதில் கூறுவது என்று தெரியவில்லை. "புடவை அம்மாவுடையது" என்றாள். உடனே, 'என்ன இப்படி அசட்டுத்தனமாக உளறுகிறோம்? அத்தனை அழகாகப் பேசிய அவர் மனம் மகிழ் இருந்போல்



பனிச்சென்று இரண்டு வார்த்தைகள் சொல்லத் தெரிகிறதா எனக்கு' என்று தன்னைத் தானே நொந்து கொண்டாள்.

ரங்கன் கலகலப்பாகச் சிரித்தான். "நமக்கென்று துணிமணிகள் ஏராளமாய் இருந்தாலும், அப்பா அல்லது அம்மாவுடையதை எடுத்து உடுத்திக் கொள்வதில் உள்ள சுகம் வருமா? என் அம்மா இறந்துபோன பிறகு நீண்ட நாட்களுக்கு நான் அம்மாவுடைய புடவையைப் படுக்கையின் மேல் விரித்தால் தான் படுத்துக் கொள்வேன் என்று அடம் பிடிப்பேனும். இந்தப் பழக்கத்தை மாற்ற என் அப்பா ரொம்பச் சிரமப்பட்டுப் போனாராம். அது குழந்தையாக இருந்தபோது. பத்துப் பன்னிரண்டு வயதுச் சிறுவனாயிருக்கையில் அப்பாவுடைய யூனிஃபார்மை எடுத்துப் போட்டுக் கொண்டு விடுவேன். தொள புளாவென்று இருக்கும். அப்போ அப்பா இன்ஸ்பெக்டர். க்ரீஸ் போய் விட்டது, கசங்கிவிட்டது என்று அப்பா தவியாய்த் தவிப்பார். ஆனால் என்னைக் கோபித்துக் கொள்ள அவருக்கு மனம் வராது."

இப்படி அவன் சகஜமாக உரையாடியதும் 'அசட்டுப் பிசட்டென்று பேசினோமோ' என்ற எண்ணத்தில் ஏற்பட்ட பதற்றமெல்லாம் நீங்கப் பெற்றவளாய் மீனு சிரித்தாள். முதல்தரமான ஒரு கச்சேரியில் சங்கதிகள் உதிர்வதைக் கேட்கும்போது ஏற்படும் சுகானுபவத்தை மீனுவின் சிரிப்பிலேயும் உணர்ந்தான் ரங்கன்.

'அம்மாவின் பெட்டியைக் குடைந்து இதை எடுத்துக் கட்டிக் கொண்டது எவ்வளவு நல்லதாயிற்று' என்று எண்ணிக்கொண்டாள் மீனு. பத்மநாபன் கூடச் சொன்னார்." "அம்மாவுக்கென்று ஒன்றிரண்டு புடவைகளாவது விட்டு வையேன் மீனு" என்று. அம்புஜம் உடனே, "கட்டிண்டு போகட்டுமே, குழந்தைதானே!" என்று பரிந்து பேசினாள். இதை நினைத்து உள்ளம் நெகிழ்ந்தாள் மீனு. இப்போது 'ஒண்ணே ஒண்ணு கண்ணே கண்ணு' என்பது போல் மிக உயர்ந்த ஸெண்ட் பாட்டில் ஒன்றும் அம்புஜத்தினிடம் உண்டு. 'ப்ரிமிடிவ்' என்ற பெயரில் பாரிஸ் மாக்ஸ் ஃபாக்டர் ஸ்தாபனம் தயாரித்தது அது. "போதும்! போதும்! வீணடிக்காதே" என்று அம்புஜம் அலறும்வரையில் அதை எடுத்துத் தாராளமாகப் பூசிக் கொண்டிருந்தாள் மீனு. அதை வாசனை பிடித்ததுடன் அவள் மனத்தையும் படித்தவனாக ரங்கன் சொன்னான்: "பிட்டூனியாவுக்கும் டாலியாவுக்கும் இத்தனை மணம் உண்டு என்று இதுநாள் வரையில் எனக்குத் தெரியாது!"

'உங்களுடைய உடையும் ரொம்ப ட்ரிம்மாகத்தான் இருக்கிறது' என்று சொல்லக் கொள்ள ஆசைப்பட்டாள் மீனு. ஆனால் வாய் வரவில்லை. அதற்குப் பதில், "ஒரு வேடிக்கை பார்த்தீர்களா! இந்த மண் வாகு, இந்த சீதோஷ்ண நிலையின் சிறப்பு இவை காரணமாக இங்கே மலர்கள் ஏராளமாய்ப் பூத்துக் குலுங்குகின்றன. தோட்டம் போடுவது கொடைக்கானலில் சிரமமான காரியமே இல்லை. ஆனாலும் வாசனை உள்ள மலர்கள் ரொம்பக் குறைவு. பார்க்கத்தான் எல்லாம் கண்ணைப் பறிக்கின்றன" என்றாள்.

"நிஜம்தான்" என்றான் ரங்கன்.

இருவருக்கும் மேலே என்ன பேசுவதென்று நிறையத் தெரியும். அவர்கள் பரிமாறிக் கொள்ளக் கூடிய வார்த்தைகள் மலை மலையாக இரு மனங்களிலும் குவிந்து சரியக் காத்திருந்தன. ஆனால் சரியவிட அவர்களுக்குப் பயம்.

தாராளமாய் மனத்தில் உள்ளதையெல்லாம் கொட்டித் தீர்க்க உரிய காலம் வந்து விட்டதா இல்லையா என்று நிர்ணயிக்க முடியாததால் தயக்கம். மனங்கள் ஒன்றை ஒன்று ஏற்றுக் கொண்டு விட்டன என்பது இருவருக்குமே நிச்சயமாகிப் போன விஷயம் தான் என்னும்போது இப்படி ஒரு வாய்ப் பூட்டை யார் எங்கிருந்து கொண்டு வந்து போட்டார்கள்?

"அப்பா வரவில்லையா?" என்று அவள் கேட்டது அந்தச் சந்தர்ப்பத்தில் அபஸ்வரமாக ஒலித்தது. ஒருவேளை அவனைத் தன்னுடன் இணைத்துச் சற்றுக் கட்டு மீறிய கற்பனையில் ஆழ்ந்ததால் குற்ற உணர்ச்சி வசப்பட்டு அவள் இயல்பாகப் பேச முடியாமல் திணறினாளோ என்னவோ? அப்படித்தான் இருக்க வேண்டும். ஏனெனில் ஜாதி வேற்றுமை பற்றிய எண்ணமோ, அது அவ்விருவரும் இணைசேர ஒரு தடையாக நிற்கலாம் என்ற நினைப்போ இருவருக்கும் இதுவரையில் தோன்றவேயில்லை.

'உங்களுடைய டிரஸ்ஸும் பிரமாதமாகத்தான் இருக்கிறது' என்று அவள் சொல்லியிருந்தால் அது நூற்றுக்கு நூற்றிப் பத்துச் சதவீதம் உண்மையாகத்தான் இருந்திருக்கும். ஆஜானுபாகுவான அவன் தோற்றம் யாரையும் இரண்டாவது தடவை திரும்பிப் பார்க்கச் செய்யும் சக்தி படைத்ததாகத்தான் இருந்தது. அளவான நெற்றிக்கு மேல் குபுக்கென்று எழும்பிப் பொங்கிய கேசம் அலை அலையாக நவீன பாணியில்

முன்னால் வடிந்தது. அவன் அணிந்திருந்த டெர்ரிகாட் சட்டை, பாறை மேல் வழியும் நீர்போல் அவன் அகன்ற மார்பில் கீழிறங்கிச் சிறிய இடையில் பாண்டுக்குள் செருகப்பட்டிருந்தது. சட்டையில் மேலிருந்து கீழாகச் சிவப்பும் கறுப்பும் மஞ்சளுமாய் மெல்லிய கோடுகள் ஓடி அவன் உயரத்தைக் கூட்டிக் காட்டின. வயிற்றுப் பகுதியில் அந்தக் கோடுகள் சிறிதும் வளைந்து கொடுக்காமல் செங்குத்தாகவே சென்றன. ரங்கன் நன்றாகச் சாப்பிடக் கூடியவன் என்பதை நேருக்கு நேர் கண்டிருந்தாள் மீனா. ஆனால் அத்தனை 'கலோரி'களையும் அவன் தேகாப்பியாசத்தின் மூலம் வியர்வையாக வெளியேற்றிக் கொண்டுமிருந்தான் என்பதை அவன் ஒட்டிய வயிறு சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தது.

''அப்பா இன்று வெளியே 'எங்கும் வரவில்லையாம். அறையிலேயே உட்கார்ந்து சாவகாசமாய்ப் படித்துக் கொண்டிருக்கிறேன் என்று சொல்லி விட்டார்'' என்றான் ரங்கநாதன். ''மிஸ்டர் பத்மநாபன் எங்கே? உன் அம்மாவையும் காணோமே?''

''அப்பா கூலிங்கிளாஸை மறந்து போய் அறையிலேயே வைத்துவிட்டு வந்து விட்டார். அதை எடுத்துக் கொண்டு வருகிறேன் என்று அம்மா போனாள். கொஞ்ச நேரம் கழித்து, 'அவள் தேடிக் கொண்டிருக்கிறாள் போலிருக்கு; பார்த்துட்டு வரேன், இங்கேயே இருங்கோ' என்று சொல்லி விட்டு அப்பாவும் போனார். இரண்டு பேரும் போய் இருபது நிமிஷங்களுக்கு மேல் ஆகப் போகிறது.'' மீனா கைக் கடிகாரத்தைப் பார்த்தாள். ''இதோ இன்னும் பத்து நிமிஷங்களில் பஸ்ஸும் புறப்பட்டு விடும். நாங்க இன்னிக்கு வெளியே போன மாதிரிதான்.''

''நிதானமா வரட்டும். கறுப்புக் கண்ணாடியைத் தேடி எடுப்பதென்றால் சுலபமான காரியமா? நேரமாகத்தான் செய்யும்'' என்றான் ரங்கன். குரலில் கிண்டல் எட்டிப் பார்த்தது. ''அதுவும் மாமாவும் மாமியும் சேர்ந்து தேட ஆரம்பிச்சுட்டாங்கன்னா அவங்களுக்கு நேரம் போறதே தெரியாது!''

கலகலவென்று சிரித்தாள் மீனா. ''இளைஞர்களுக்காகப் பெரியவர்கள் அனுசரித்துப் போவது பற்றி ஆயிரம் சொல்கிறார்கள். ஆனால் பெரியவர்களுக்காக இளம் வயதினர் எவ்வளவு தூரம் பக்குவமாக நடந்து கொள்ளுகிறார்கள் என்பது பற்றி யாருமே சிந்திப்பதில்லை'' என்றாள்.

''மாமி ரொம்பக் கெட்டிக்காரி. கல்யாண வயதில் பெண் இருந்தும் இன்னமும் தன் கணவரைக் கட்டிப் போட்டு வைத்திருக்கிறாள் பார்! அது அன்புக் கயிறு. அதனால்தான் அறுபடாமல் இருக்கிறது!''

''என் அப்பா தங்கமான குணமுள்ளவராய் இருப்பதால் அவள் அவருக்கு அடிமையாகிக் கிடக்கிறாள் என்று ஏன் சொல்லக் கூடாது?'' என்றாள் மீனா.

''இரண்டும்தான்'' என்றான் ரங்கன். ''ஒரு கையை வீசினால் சத்தம் வருமா?'' என்று கேட்டவன், ''அனு! விசு! வாங்க, போகலாம்'' என்று அழைத்தான்.

''அப்பா வரட்டும்'' என்றான் விசு.

''அப்பா வந்துடுவாங்க. நாம் போய்க்கிட்டே இருக்கலாம். பஸ் கிளம்பப்போகுது. ஹாரன் அடிச்சாச்சு, பாரு. நாம் சீக்கிரமாப் போய் அவங்களுக்காகப் பஸ்ஸை இரண்டுநிமிஷங்கள் நிறுத்தி வைக்கலாம்.''

எல்லோரும் கேட்டுக்கு வெளியே நின்ற பஸ்ஸை நோக்கி நடந்தார்கள்.

கொடைக்கானலுக்கு வந்த தினத்திலிருந்து தன்னை அலங்கரித்துக் கொள்வதில் மீனாவின் சிரத்தை படிப்படியாக அதிகரித்துக் கொண்டே வந்திருப்பதை ரங்கன் கவனித்துத்தான் இருந்தான். அதெல்லாம் தனக்காகத்தான் என்பதும் அவனுக்கு நிதர்சனமாகத் தெரிந்திருந்தது. இதற்கு நன்றி தெரிவிக்கும் விதமாக ஏதேனும் தான் கூற வேண்டும், செய்ய வேண்டும் என்று துடிப்புடன் காத்திருந்தான். அது அதிகப்பிரசங்கித்தனமாக அமைந்துவிடாமல் இயல்பான காரியமாகவும் இருக்க வேண்டும், நெஞ்சையும் தொட வேண்டும். அதற்கு இப்போது ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. அவர்கள் பஸ்ஸை நோக்கிச் சென்றபோது வழியில் ஒரு வேலி. அதில் மூங்கில் பிளாச்சுக்கள் லவலேசமும் தெரியாதவாறு ரோஜா, அடர்ந்த கொடியாகப் படர்ந்து கொத்துக் கொத்தாகப் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. வேலிக்கு அப்பால், மலர்த் தோட்டம். தோட்டமா அது? இல்லை, மலர்க் காடு!

அரசி எலிஸபெத்தின் பெயரைத் தாங்கி நின்ற அரிய பெரிய கருஞ்சிவப்பு நிற ரோஜா முதல் நாம் அன்றாடம் பார்க்கும் சாதாரண ரோஜா வரையில் பல ரகங்கள், பல நிறங்கள். அவை தவிர வேறு பலப் பல விதமான மலர்ச் செடிகளும் பயிர் செய்யப் பட்டிருந்தன.

'ஹை ஜம்ப்' தாண்டிப் பழகியதாலோ என்னமோ ரங்கன் வெகு

# தடுமாறாமல் நொடியில் கிளம்புங்கள்

## மற்றவர்களைவிட முன்னால் இருங்கள் — எப்பொழுதும்



கூடுதலான சக்தியைதரும் **ஆம்கோ** பாட்டரியுடன்




மிடுக்கு தேவை. காரியத்தைச் சாதிக்க கிளம்புகையில் தடுமாறி சங்கடப்படாதீர்கள். ஒரு பாட்டரி வாங்க எண்ணம் பெறும்போது, 'கூடுதலான சக்தியை தரும்' ஆம்கோ பாட்டரியைத் தவிர வேறு எதையும் சட்டை செய்யாதீர்கள். பாட்டரி கோளாறு என்ற பிரச்னையை நீங்கள் மறந்து விடலாம். கார் ஓட்டுவதை இன்பகரமானதாக ஆக்கிக் கொள்ளுங்கள்.

ஒவ்வொரு ஆம்கோ பாட்டரியும் — உங்களுடைய பாட்டரிக்கு மிகவும் தேவையான அந்த வலுவையும், நீண்ட ஆயுளையும் அளிக்க — நவீன ஆராய்ச்சி அபிவிருத்தி, சிறப்பான என்ஜினீரிங் திறன், கடுமையான தரக்கட்டுப்பாடு, கிட்டத்தட்ட 40 வருட கால அனுபவம் ஆகியவற்றால் ஆனது.

**ஆம்கோ பாட்டரீஸ் லிமிடெட்,**
யூனிடி பில்டிங்ஸ், பெங்களூர்-2.

MAC (B) AM-97 TAM

லாகவமாக அந்த வேலியைத் தாண்டி அப்பால் சென்றான். கண்ணிமைக்கும் நேரத்தில் ஒரு செக்கச் சிவந்த ரோஜா வைப் பறித்துக் கொண்டு இப்பால் பாய்ந்தான். கறுப்பு ஸ்வெட்டரைச் சரியாக அணியாமல் ஒரு சால்வை போல் ஒயிலாகத் தோள்களில் போர்த்திக்கொண்டிருந்த மீனாவை நெருங்கினான். "உன் கேசத்தோடு ஸ்வெட்டரும் கறுப்பாக இருப்பதால் தலையில் ஒரு பக்கமாக இந்த மலரைச் சூடிக் கொண்டால் எடுப்பாக இருக்கும்" என்று சொல்லியபடியே ரோஜாவைக் கொடுத்தான் ரங்கன். தன் இரு கைகளையும் நீட்டி அம்மலர்களை வாங்கிக்கொள்கையில் அவன் கரத்தையும் சேர்த்துப் பற்றினாள் மீனா. பற்றிய கரத்தை இலேசில் விடுவதாகவும் இல்லை. அவன் வியப்பும் நிறைவுமாக அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

"ரோஜாக்கள் இதுமாதிரி ஆயிரக் கணக்கில் இருக்கின்றன. கொடுக்கிற கை தானே முக்கியம்" என்றாள் மீனா.

"ரங்கன் மாமா! பூப் பறிக்கக் கூடாதுன்னு போர்டு போட்டிருக்கு" என்றாள் அனசூயா.

"எச்சரிக்கைப் பலகைகள் எப்போதுமே பொதுமக்களுக்காகத்தான்" என்றான் ரங்கன். "விசேஷத் தகுதி பெற்றவர்கள் எச்சரிக்கையைப் புறக்கணிக்கலாம். 'உத்தரவின்றி உள்ளே வரக்கூடாது' என்று போட்டிருக்கும். என் அப்பா தயங்குவாரா? அவர்தான் டி. ஐ. ஜி. ஆச்சே!"

"அது சரி ஆனால் நீங்க சாதாரண போலீஸ்காரர் கூட இல்லையே?" என்றாள் அனசூயா.

"நான் எனக்காகப் போகவில்லையே? உன் அக்காவுக்காகத்தானே வேலியைத் தாண்டினேன்!"

"அவள் ரொம்பப் பெரிய மனுஷியாக்கும்?"

"இல்லையா பின்னே? ஷி இஸ் எ பியூட்டி குவீன்" என்றான் ரங்கன். சொன்னவுடன், 'அப்பாடா! இந்த வார்த்தைகளைக் கூற ஒரு நல்ல சந்தர்ப்பம் அகப்படாதா என்று எத்தனை நாட்கள் காத்திருக்க வேண்டியிருந்தது' என நினைத்துக் கொண்டான்.

மீனா மெய்சிலிர்த்து நின்றாள்.

* * *

'கோக்கர்ஸ் வாக்'கில் பஸ் அரை மணி நேரம் நிற்கும் என்று டிரைவர் சொன்னான். அப்புறம் ஏரிக்குப் போகிறதாம். ஹோட்டலுக்கே சொந்தமான — அங்கு தங்கியிருப்பவர்களின் சௌகரி

## தெரிந்த விளையாட்டு: தெரியாத விவரம்

### 7. மல்யுத்தம்

- மல்யுத்தச் சரித்திரத்திலே கிக்கார் சிங்குக்கும் காமா பயில்வானுக்கும் நடைபெற்ற பந்தயம் பிரசித்தமானது. கிக்கார் சிங் உருண்டு திரண்டு வளர்ந்த கிக்கார் மரத்தை வேரோடு பிடுங்கி எறியும் ஆற்றல் படைத்தவன். ஆகவே, அவனுக்கு கிக்கார் சிங் என்ற நாமமே சூட்டிவிட்டது. ஆனால் காமா பயில்வான் கிக்கார்சிங்கைத் தோல்வியடையச் செய்து விட்டான்!

- மல்யுத்த வீரர் குலாம் பயில்வான் கடல் கடந்து சென்று ஐரோப்பாவில் மல்யுத்தப் போட்டிகளில் வென்று புகழ் நாட்டியவன். காமா இந்தக் குலாம் பயில்வானின் சிஷ்யர்.

- பிரசித்திபெற்ற காமா லண்டனுக்குச் சென்ற குழுவில் இடம்பெற்றும் போட்டியில் கலந்துகொள்ள முடியவில்லையாம். 'உயரம் கம்மி; உடல்வாகு போதாது' என்று போட்டியில் காமாவைச் சேர்த்துக் கொள்ளவில்லை. ஆனால் காமா மனம் தளர்ந்துவிடவில்லை. லண்டன் தியேட்டர் ஒன்றில் வாரம் 250 பவுன் சம்பளத்தில் சேர்ந்துகொண்டு, மல்யுத்த வீரர்களுக்குச் சவால் விடுத்தார். "என்னுடன் ஐந்து நிமிஷங்கள் மல்யுத்த மைதானத்தில் தாக்குப் பிடிப்பவர்களுக்கு ஐந்து பவுன் பரிசு" என்று வெளியிட்டார். பல மல்யுத்த வீரர்கள் இரண்டு மூன்று நிமிஷங்களுக்கு மேல் தாக்குப் பிடிக்க முடியவில்லை. இந்தச் சமயத்தில்தான் உலகப் புகழ்பெற்ற செபிஸ்கோவுக்கும் காமாவுக்கும் மல்யுத்தப் போட்டியை நடத்த லண்டனில் உள்ள மல்யுத்த கமிட்டியினர் முன் வந்தனர். ரஷ்ய மல்யுத்த வீரரைத் தோல்வியடையச் செய்து செபிஸ்கோ அப்பொழுது புகழேணியின் உச்சியில் இருந்தார். மூன்று மணி நேரம் நடந்த போட்டியில் செபிஸ்கோ அடிக்கடி பாயின் ஓரம் ஓடி அபயம் தேடினார். காமாவின் அடி தாளாமல் செபிஸ்கோ திணறினார். ஆட்டம் அன்று வெற்றி தோல்வியின்றி முடிந்தது. மறுநாள் ஆட்டம் 'தொடரும்' என்று போட்டார்கள். ஆனால் செபிஸ்கோ அந்த மைதானம் பக்கம் மறுநாள் திரும்பினால்தானே? காமாவுக்கு உலக மல்யுத்த வீரர் பட்டம் சூட்டப்பட்டது.

1928ம் ஆண்டில் பாடியாலா மகாராஜாவின் முயற்சியில் காமாவுக்கும் செபிஸ்கோவுக்கும் அந்த முற்றுப்பெறாத போட்டி தொடர்ந்தது. இரண்டரை நிமிஷங்களில் செபிஸ்கோவைத் தோல்வியடையச் செய்தார் காமா. 'அப்பா காமாவா! அந்த நவீன வீரன் இடிபோன்று தாக்குபவராயிற்றே!' என்று செபிஸ்கோ அன்று அலறினாராம்.

- நைல் நதியின் கரையில் அமைந்துள்ள பிரமிட்களில் மல்யுத்தக் காட்சிகளைக் காணலாம். கி. மு. 3000 ஆண்டுகளுக்கு முன்பே எகிப்தியர்கள் மல்யுத்தப் போட்டிகள் நிகழ்த்தியுள்ளனர். —குண்டுமணி

படம்: ரஷ்ய வீரர்களின் மல்யுத்தம்.



யத்துக்காக உள்ள அந்தப் பஸ்ஸிலிருந்து இறங்கியவர்களில் பெரும்பாலோர், 'கோக்கர்ஸ் வாக்' என்ற அந்தக் குறுகலான நடை பாதையில் இந்த மூலையிலிருந்து அந்த மூலைக்கு விடுவிடுவென்று பத்து நிமிஷங்களில் நடந்து போய் விட்டார்கள். ''அரை மணி நேரம் இங்கே எதற்குத் தாமதிக்கிறது?'' என்று அவர்களில் சிலர் கேட்டுக்கொண்டார்கள். மீதமிருந்தவர்கள் நிதானமாக நடந்தபோதிலும் பஸ் ஹாரன் அடித்துக் கிளம்பப் போவதை அறிவிக்கும் முன்னர் போய்ச் சேர்ந்து விட்டார்கள். கடைசி ஆசாமியாகத் தென்பட்ட ஒருவர், பத்மநாபனை நோக்கி, ''என்னங்க நீங்க 'வரலையா?'' என்று விரைந்து சென்று கொண்டே வினவினார்.

''நாங்க இன்னிக்கு ஏரிக்கு வரலே. டிரைவரிடம் சொல்லிடுங்கோ'' என்று அவர் பின்னால் கத்தினார் பத்மநாபன். பிறகு ரங்கன் பக்கம் திரும்பி, ''கொடைக்கானல், ஊட்டி என்று வந்துவிட்டு, பரக்கப் பரக்க எல்லாத்தையும் ஓடுகிற ஓட்டத்தில் பார்த்து முடிக்கிறதிலே எனக்கு நம்பிக்கை இல்லே. இரண்டு மூன்று இடங்களை நாம் காணாமலே இருந்து விட்டாலும் பாதகமில்லே. பார்ப்பதை நன்றாக ஆற அமர இருந்து மனசில் வாங்கிக் கொள்ளணும். என்ன சொல்கிறாய்?'' என்றார்.

''ஐ அக்ரீ'': என்றான் ரங்கன், மீனாவை ஊடுருவி நோக்கியபடி. ''எனக்கென்னவோ இங்கு ஒரு காட்சியை நான் முழுதும் என்ன, வாழ்நாள் முழுதும் பார்த்துக் கொண்டேயிருந்தாலும் அலுப்புத் தட்டாது என்றே தோன்றுகிறது.''

'நிலைமை முற்றிவிட்டது' என்று எண்ணிக் கொண்டார் பத்மநாபன். மீனா — ரங்கன் விஷயத்தில் தாம் கொஞ்சம் அசட்டையாக இருந்து விட்டது மிகப் பெரிய தவறா அல்லது மாபெரும் நன்மையா என்று அவருக்கே புரியவில்லை.

குழப்பத்திலிருந்து விடுபட அவர் கோக்கர்ஸ்வாக்கை யொட்டியிருந்த அற்புதமான காட்சிப் பக்கம் பார்வையைச் செலுத்தினார். அந்தக் குறுகலான நடைபாதை மூன்று நான்கு வளைவுகளைக் கொண்டது. ஒவ்வொரு வளைவிலும் இயற்கைக் காட்சி மாறியது, ஒன்றை யொன்று தூக்கியடிக்கும் வனப்பில். பாதையின் ஒரு பக்கம் மேடாக இருந்தது. அதன் மேல், வரிசையாகப் பாதை நெடுகிலும் விசாலமான தோட்டங்களுடன் கூடிய ஐந்தாறு வீடுகள்; நோயாளிகளுக்கென ஒரு விடுதி. பாதையின் மறுபக்கம் அதள பாதாளம். ஆறாயிரம் அடி பள்ளம்! பாதுகாப்புக்கென்று ஒரு முள் வேலி கூடக் கிடையாது!

வேலி போடாததால் ஆபத்து அதிகம்தான் என்றாலும் வேலி போட்டிருந்தால் இயற்கையுடன் மனம் முழுமையாக ஒன்ற அது தடையாகத்தானிருந்திருக்கும் என்பதை மறுக்க முடியாது.

''இங்கிருந்து பைனாகுலர்ஸில் பார்த்தால் மதுரைகூடத் தெரியுமாம். என்னுடைய டெலி லென்ஸையாவது கொண்டு வந்திருக்கணும் நான். அதைக் காமிராவில் பொருத்தி உங்களுக்கு மதுரையைக் காட்ட முடிந்திருக்கும்'' என்று கூறியபடியே ரங்கன் தனது ஆஸாஹி பென்டாக்ஸ் காமிராவின் உறையை நீக்கிச் சில தடவைகள் 'கிளிக்' செய்தான். இயற்கைக் காட்சிகள், பத்மநாபன் குடும்பம் இவற்றோடு மீனா தனியாக ஒன்றிரண்டு 'ஸ்னேப் ஷாட்'டுகளில் சிக்கிக் கொள்கிற மாதிரியும் காமிராவைத் துரிதமாகவும் ஒரு நிபுணன் என்று அனுமானிக்கக்கூடிய வகையிலும் கையாண்டான்.

''பில்லர் ராக்ஸிலும் ராக் ஆஃப் விஷனிலும் நாம் பார்த்த காட்சிக்கும் இதற்கும் என்ன வித்தியாசம்? சொல்லு, பார்க்கலாம்!'' என்றார் பத்மநாபன்.

''நான் சொல்றேன்'', ''நான் சொல்றேன்'' என்று ஒவ்வொருவரும் ஒரு விஷயம் சொன்னார்கள். ஆனால் அம்புஜம்தான் முக்கியமான வேற்றுமையைக் குறிப்பிட்டான். ''அங்கே கண்ணுக்கெட்டிய தூரம் மலை முகடுகளையும், காடுகளையும், பள்ளத்தாக்குகளையும் பார்த்தோம். இங்கே கண்ணுக்கெட்டிய தூரம் சமவெளியைப் பார்க்கிறோம்'' என்றான்.

''கரெக்ட்'' என்று ஆமோதித்தார் பத்மநாபன். ''நடுநடுவே மண்மேடுகள் மாதிரி சில குட்டி மலைகள் தென்படுகின்றன பார்!''

''பேசிண்டே இங்கே நடக்கப்படாது! ஆபத்து! அதோ, பாருங்கோ அனு ஓரமாய்ப் போறதை!'' என்ற அம்புஜம் அனசூயாவை அதட்டினாள். ''அடியே! இந்தண்டை வா! ஓரமாப் போனால் காலை முறிச்சுடுவேன்!''

அவள் மிரட்டலில் குழந்தை பயந்ததால்தானோ என்னவோ அந்த அசம்பாவிதம் நடந்து விட்டது. ''ஐயோ!'' என்று எல்லோருடைய வாயிலிருந்தும் வார்த்தை வெளிப்பட்ட அதே சமயத்தில் அனைவருக்கும் பீதியில் வயிறு முதுகெலும்போடு சேர்ந்து ஒட்டிக் கொண்டது போலாயிற்று. (தொடரும்)

# டயமண்ட்®

# செயின்களை

# அசல்

# உருப்புகளாகக்

# கொண்டவை



**பேர்கின்ஸ், அம்பாஸிடர், லாம்ப்ரெட்டா, வெஸ்பா, புல்லெட், ஜாவா, ராஜ்தூத்...**

**செயின் மாற்றும்போதும் உபயோகிக்க முற்றிலும் சிறந்தவை!**

FDSTID-1771TM

**இந்நாட்டில் தயாராகும் செயின்களில் டயமண்ட் செயின்கள் மட்டுமே ஃபார்ம்ட் ரோலர்கள் கொண்டவை. இத்துறையில் 80 வருட கால அனுபவம் கொண்ட அமெரிக்க தொழில்நுட்பக் கூட்டுறவுடன் இவை தயாரிக்கப்படுகின்றன.**

**மறவாதீர் இதனை!**

**டயமண்ட் செயின்தான் வேண்டுமென்று உங்கள் மெக்கானிக்கிடம் வற்புறுத்திக் கேளுங்கள்.**

செயின் இணைப்புகளில் ◇® அடையாளம் இருக்கிறதா என்று பாருங்கள்



தயாரிப்பவர்கள்:

**டி ஐ டயமண்ட் செயின் லிமிடெட், சென்னை-1**

தொழிற்சாலை: அம்பத்தூர், சென்னை-53.

**இது ஒரு Ⓣ டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் நிறுவனம்**

◇®

டயமண்ட் என்ற பெயரும் சின்னமும் அமெரிக்காவைச் சேர்ந்த டயமண்ட் செயின் கம்பெனியின் பதிவுபெற்ற டிரேட்மார்க்குகளாகும்.

உரிமை பெற்று இந்தியாவில் உபயோகித்து உற்பத்தி செய்வோர்: டிஐ டயமண்ட் செயின் லிமிடெட், சென்னை-1

விநியோகஸ்தர்கள்:

**டி.ஐ. & எம். ஸேல்ஸ் லிமிடெட்**

| சென்னை | பம்பாய் | கல்கத்தா | புதுடெல்லி |
|---|---|---|---|
| த.பெ.எண் | த.பெ.எண் | த.பெ.எண் | த.பெ.எண் |
| 1960 | 1308. | 9151 | 453 |

படுசுட்டியான குடும்பம்!
எல்லோரும் என்னுடை
ஜான்ஸன்ஸ்* எப்பவும்
உபயோகிக்கிறாங்க!




குழந்தைகளுக்கு உகந்தது,
உங்களுக்கும் சிறந்தது.

# பொதுத் துறைத் தொழிலகங்கள் லாபம் காணுமா?



[தனியார் துறை இலாபகரமாக இயங்குவது போன்று பொதுத் துறைத் தொழில்கள் இயங்குவதில்லை என்று பரவலாகக் கருத்து நிலவுகிறது. பொதுத் துறைத் தொழில்களில் நஷ்டம் ஏற்பட்டால் அது நாட்டுக்கே நஷ்டமல்லவா? பொதுத் துறைத் தொழில்கள் நன்கு இயங்கிப் பலனளிக்க என்ன வழிமுறைகளைக் கையாளலாம் என்பது குறித்துப் போபால் 'ஹெவி எலெக்ட்ரிகல்ஸ்' நிர்வாக டைரக்டராகப் பணியாற்றி (1958 - 63) ஓய்வு பெற்றுள்ள திரு எஸ். சாரங்கபாணியைக் கேட்டிரும்.] □

ஒவ்வொரு ஆண்டும் பொதுத் துறைத் தொழில்களில் ஏராள நஷ்டம் என்று செய்திகள் வருகின்றனவே, ஏன் இப்படி?

பொதுத் துறையில் சில தொழில்களைத் தொடங்கு முன், தொடக்க காலத்திலிருந்து குறிப்பிட்ட சில ஆண்டுகள்வரை இலாபத்தை எதிர்பார்ப்பதற்கில்லை என்று நிர்மானிக்கப்படுகிறது. எவ்வளவு ஆண்டுகள் வரை இலாபம் வராது என்பது ஒவ்வொரு தொழிலிலும் முன்கூட்டியே திட்டமிடப் பெறுகிறது. உதாரணமாக, போபால் 'ஹெவி எலெக்ட்ரிகல்ஸ்' தொழிற்சாலை தொடங்ியதிலிருந்து பன்னிரண்டு ஆண்டுகளுக்கு இலாபம் அளிக்காது என்பது முன்கூட்டியே எதிர்பார்க்கப்பட்டதே. ஆனால், பொதுத் துறைத் தொழில்கள் எல்லாமே இப்படியன்று. சான்றாக, கனரகக் கொதிகலன்கள் தயாரிக்கும் திருவெறும்பூர் தொழிற்சாலை, ஹரித்துவார் மின்சார் மெஷின் டூல்ஸ் தொழிலகம், இந்தியத் தொலைபேசிக் கருவித் தொழிற்சாலை இவையெல்லாம் தொடக்கத்திலிருந்தே இலாபகரமாகத்தான் செயல்பட்டு வருகின்றன. போபால் கனரக மின் கருவிகள் தொழிற்சாலையில் ஸ்விட்ச் கியர், டிரான்ஸ்ஃபார்மர், டிராக்ஷன் மோட்டார் போன்ற பல்வேறு பொருட்கள் தயாராகின்றன. ஒவ்வொரு பொருளும் தயாரிக்கப்படும் இடம் ஒரு தனித் தொழிற்சாலை போன்றது. இங்கு தயாரிக்கப்படும் மின்கருவி ரகங்களின் எண்ணிக்கையும் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டேயிருக்கிறது. ஆகவேதான் இத் தொழிற்கூடம் அமைக்கும்போது, குறைந்த பட்சம் 12 பன்னிரண்டு ஆண்டு காலத்துக்கு இலாபம் கிடைக்காது என்று அநுமானிக்கப்பட்டது.

தலைமைப் பொறுப்புள்ள அதிகாரியை இரண்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு மாற்றல் செய்வதும் புதிதாகப் பொறுப்பேற்பவர்கள் அங்குள்ள நிலைமையைப் புரிந்துகொள்ளச் சில மாதங்கள் ஆவதும் பொதுத் துறையில் சகஜந்தானே? பொதுத் துறை இலாபகரமாகச் செயல்பட இதுவே ஒரு தடையாக அமைந்துவிடக் கூடுமல்லவா? மேலும், சில ஆண்டுகளுக்குப்பின்னர் நம்மை இங்கிருந்து மாற்றி விடுவர் என்ற உணர்வு காரணமாக, அதிகாரிகளுக்கு ஒரு பிடிப்பு ஏற்படாமல் போய்விடக் கூடுமல்லவா?

அப்படிப்பட்ட நிலைமை முன்பு சகஜமாயிருந்தது. இன்று அநேகமாக இல்லை எனக் கூறலாம். நான் ரயில்வே இலாகாவிலிருந்து 1958ல் ஓய்வு பெற்றதும் போபால் தொழிற்சாலை நிர்வாகப் பொறுப்பை ஏற்றேன். 1963 வரை பணியாற்றி ஓய்வு பெற்றேன். ஆனால், இப்பொழுதெல்லாம் இதுபோன்ற தொழிற்சாலைகளில் மானேஜிங் டைரக்டர் பதவிக்கு நியமிக்கப்படுகிறவர்கள் அதே தொழிற்சாலையில் அதிகாரியாகப் பதவி வகித்தவர்களே. போபால் தொழிற்சாலையில் கமர்ஷியல் மானேஜர் பதவி வகித்த ஒருவர் இன்று அங்கு தலைமைப் பதவி வகிப்பது, தொழிற்சாலையில் குழப்பங்கள் இல்லாமல் வேலை நடக்கத் தக்க சூழ்நிலையை உருவாக்கும். தலைமைப் பதவிக்கு வேறு ஓர் இடத்திலிருந்து புதிய நபரைக் கொண்டு வந்து குறைந்த காலத்துக்குப் பதவி ஏற்கச் செய்வது நல்ல பலனளிக்காது.

தலைமை நிருவாக அதிகாரிக்கு முழு அதிகாரம் வழங்கப்படுகிறதா?

முன்பெல்லாம் இல்லை. இப்பொழுது நிலைமை மாறி வருகிறது. சில விஷயங்களில் முடிவெடுக்கு முன் நிருவாகப் பொறுப்பிலுள்ள தலைமை அதிகாரியைக் கூடக் கலந்து கொள்ளாமல் வெளியில் உள்ள நிபுணர்களைக் கலந்து ஆலோசிப்பார்கள். நிர்வாக அதிகாரியிடம் நம்பிக்கையின்மை காரணமாக இருக்கலாம். அவரது திறமையைக் குறைவாக மதிப்பிட்டதன் விளைவாக இப்படி அயல் நிபுணர்களின் ஆலோசனையைக் கேட்டிருக்கலாம். இது விரும்பத்தக்கதல்ல. அந்த அதிகாரிக்குப் பிடிப்பு விட்டுப் போகும். எப்படியோ போகட்டும் என்ற அலட்சிய மனப்பான்மை ஏற்பட்டு விடும். ஆனால், இப்பொழுதெல்லாம் அந்தப் பழைய போக்கு காணப்படுவதில்லை. நல்லதுதான். என்னைக் கேட்டால், தலைமை நிருவாகிக்கு எல்லா விஷயங்களிலும் பூரண அதிகாரம் வழங்கிவிடவேண்டும். யாருடைய குறுக்கீடுமின்றி அவர் தமக்கு உகந்ததெனத் தோன்றும் முறையில் செயல்படும் உரிமை பெற்றிருக்க வேண்டும். அவ்விதம் பூரண சுதந்திரம் வழங்கிய பின்னரும் அவருடைய தலைமையிலுள்ள தொழிற்சாலை திருப்திகரமாகச் செயல்பட







### பெல்ஜியம் செய்தி

முடிவெட்டும் வலூனில் பணி புரியும் ஒரு மாது தனது மேஜையின்மீது கீழ்க்கண்ட அறிவிப்பை எழுதி வைத்திருக்கிறாள்:

"ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், டச்சு, இத்தாலி ஆகிய மொழிகள் பேசுவேன். அத்துடன் எந்த மொழியிலும் என்றால் மௌனமாகவும் இருக்க முடியும்!"

---

வில்லையென்றும் அவரை அப்பதவியிலிருந்து தாட்சண்யமின்றி நீக்கி விட வேண்டும். பொதுத் துறைத் தொழில் வெற்றிகரமாகச் செயல்பட இம்முறை பெரிதும் பலனளிக்கும்.

**ஜப்பு நாடானிலும் பொதுத் துறை முன்னேற்றம் அதிகமாகத் தடைப்படுகிறதா?**

தனியார் துறை அதிகாரிக்கு உள்ள அளவு உரிமை பொதுத் துறை அதிகாரிகளுக்கு இல்லைதான். உதாரணமாகச் சில பொருட்கள் வாங்க வேண்டுமாயின், அதற்குச் சட்டங்கள் திட்டவட்டமாக உள்ளன. அவற்றை மீறிச் செயல்படுவது பொதுத் துறை அதிகாரிக்குச் சாத்தியமில்லை. எனவே, சில விஷயங்களில் தாமதம் ஏற்படும். உடனடியாகச் சில முடிவுகளை எடுப்பது சாத்தியமன்று. இச்சிக்கல்கள் பல இன்று குறைந்து விட்டன. நிலைமை திருப்திகரமாக மாறி வருகிறது.

**பொதுத் துறைத் தொழில்களின் முன்னேற்றத்துக்கு வேறு என்ன யோசனைகளை உங்களால் கூற முடியும்?**

குறிப்பிட்ட ஒரு தொழிற்சாலையில் ஏதாவது ஒரு தொழிலாளர் பிரச்னை தலையெடுக்கும்பொழுது நிருவாகத்தினரைக் கலந்து ஆலோசிக்காமல் அரசு நேரிடையாகத் தொழிற்சங்கங்களுடன் பேச்சு வார்த்தை நடத்துவதோ, முடிவெடுப்பதோ கூடாது. தொழிலாளர்கள் மேலும் பொறுப்புணர்ச்சியுடன் நடந்து கொள்ளுவது அவசியம். மேற்பார்வை குறைய வேண்டும். ஜப்பானில் மேற்பார்வையாளர் தொழிலாளர்களை மேற்பார்வை செய்து கொண்டிருப்பதில்லை. உற்பத்தி அளவுகளைப் பதிவு செய்யும் அலுவலராகவே இருக்கிறார்கள். தொழில் நிருவாகத்தில் தொழிலாளர் பிரதிநிதிக்கும் இடமளிக்க வேண்டும். தகுதியற்றவர்களுக்கு மேலிடத்துச் சிபாரிசு காரணமாகப் பதவி உயர்வு அளிப்பது போன்ற காரியங்கள் விரும்பத்தக்கதன்று. தொழிலாளர் பிரதிநிதி ஒருவர் நிருவாகத்தில் பங்கு பெற்றால் இது போன்ற விரும்பத் தகாத செயல்களைத் தவிர்க்கலாம். தொழிலில் தாமும் ஒரு பங்குதாரர் என்ற உணர்வு ஒவ்வொரு தொழிலாளிக்கும் ஏற்பட்டால் நிலைமை பெரிதும் சாதகமாக மாறிவிடும். அதற்கான சூழ்நிலை உருவாக வேண்டும். தொழில் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளில், தொழிலாளர்கள் வேலை நேரத்தை வீணடிப்பதே யில்லை. வேலையைக் கவனிக்காமல் பேசிக்கொண்டிருப்பது, மலஜலம் கழிக்கப் போகுமிடத்தில் பீடி குடித்துக் கொண்டோ வம்பளந்து கொண்டோ நேரத்தை வீணடிப்பது இவற்றைத் தொழிலாளர்கள் தவிர்க்க வேண்டும்.

**தொழிற் சங்கங்கள் இதில் எவ்விதம் உதவலாம்?**

தொழில் அபிவிருத்திக்கான பல யோசனைகளைக் கூறலாம். வேலைநிறுத்தம் செய்யவும் போராட்டங்கள் நிகழ்த்தவும் மட்டுமே வரிந்து கட்டிக் கொண்டு முன்வருவதற்குப் பதில், தொழிற்சாலை இலாபகரமாக இயங்கித் தொழிலாளர்களுக்கும் நாட்டுக்கும் நன்மை பயக்கக் கூடிய ஆக்க பூர்வமான யோசனைகளைத் தொழிலாளர் சங்கமே முன்வந்து கூறவும், செயல்படுத்தவும் வேண்டும். குறைந்த நேரத்தில் சாதனைகளைப் பெருக்கித் தொழிலாளர்கள் கூடுதலான ஊதியம் பெறுவதற்கான வழிமுறைகளைச் சங்கமே எடுத்துரைக்கலாம்.

**'அதிகாரி - தொழிலாளி உறவு' பற்றி ஏதாவது கூற விரும்புகிறீர்களா?**

தொழிலாளியை அதிகாரி அலட்சியப்படுத்தும் மனோபாவம் நம் நாட்டில் இன்னும் சகஜமாகவே இருக்கிறது. மேலை நாடுகளில் தலைமை அதிகாரி ஒரு சாமான்யத் தொழிலாளியுடன் சமநிலையில் பேசுவது சகஜம். தொழிலாளி வேலை செய்யும் இடம் தேடி வந்து தலைமை அதிகாரி உரையாடுவதுண்டு. இங்கு அப்படிச் செய்வதைக் கௌரவக் குறைவாகவே கருதுகிறார்கள். தம்முடைய அறைக்குத் தொழிலாளரை அழைத்துப் பேசுவது தான் வழக்கமா யிருக்கிறது. ஆங்கிலேய மேலதிகாரிகள் அன்று நம்மை அலட்சியம் செய்தார்கள். உரிய மதிப்பை அளிக்கவில்லை. அவர்கள் பாணியைப் பின்பற்றி இன்று நம்முடைய அதிகாரிகள் நமது தொழிலாளிகளை அலட்சியம் செய்யும் நிலை பிரத்தியட்சமாகக் காணப்படுகிறது. பொறுப்புணர்ச்சியுள்ள தொழிலாளிக்குத் தன்னுடைய வேலையை இன்னொருவர் உடனிருந்து மேற்பார்வை பார்ப்பது பிடிக்காது. பொறுப்புணர்ச்சி உள்ள தொழிலாளர்கள் பலர் இங்கும் இல்லாமல் இல்லை. அவர்களிடம் நல்ல திறமையும் உள்ளது. அதிகாரிகளின் 'உயர்வு மனப்பான்மை' மாற வேண்டும்.

**தொழிலாளர் நலன் பேணுவதில் பொதுத் துறைக்கும் தனியார் துறைக்கும் ஏதாகிலும் வேறுபாடுகள் உண்டா?**

பொதுத் துறை நிருவாகத்தில் உள்ள தொழில்கள் தொழிலாளிகளுக்கு வீடு வசதி அளிப்பது குறிப்பிடத் தக்கது. தனியார் துறை இந்த வசதி பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. பொதுத் துறைத் தொழிற்சாலைகள் அமையும்போது தொழிலாளர் குடியிருப்புக்களும் நிறைய ஏற்படுகின்றன. இதற்கு வசூலிக்கப்படும் வாடகை மிகக் குறைவே. வீடுகள் கட்டுவதில் பெருந்தொகை முதலீடு செய்யப்படுகிறது. தொழில் நிருவாகத்தின் முதலீட்டில் இதுவும் சேர்ந்ததுதான். பொதுத் துறை நிறுவனம் லாபம் காணத் தாமதமாவதற்கு இதுவும் ஒரு காரணம்.

பேட்டி: **பரணன்**

# நல் நெஞ்சம் : மலர் இதயம்

அட்டைப்படக் கதை

ஸ்ரீமதி சுஷீலா சிக்டே

ஒரு வருஷமாக ரஞ்சனாப் பாட்டி கனகாவின் வீட்டில்தான் தங்கி யிருந்தாள். பாட்டி பூஜை பாராயணத்தில் அதிக ஊக்கம் காட்டுவதில்லை. ஆனால் சந்தனப் பெட்டி ஒன்றில் யானைத் தந்தத்தில் செய்து வைத்திருக்கும் உருவச் சிலை ஒன்றுக்கு மாலை சூட்டி ஐந்து நிமிஷங்களாவது தியானத்தில் அமர்வதை மட்டும் விடமாட்டாள். இதுதான் ரஞ்சனாப் பாட்டி செய்து வரும் பூஜை. பூஜை நேரத்தில் பத்துப் பதினைந்து நிமிஷங்கள் பாட்டிக்குத் தனிமை அவசியம். தன் செல்லமான பேத்தியைக்கூட அந்த நேரத்தில் அறையிலிருந்து வெளியே அனுப்பிவிடுவாள்.

ஆனால் கனகா ஒருநாள் தன் பாட்டியின் கட்டளையைப் பொருட்படுத்தாமல் பாட்டி குளிக்கச் சென்றிருந்த நேரம் பார்த்து அவள் அறைக்குள் நுழைந்து கட்டிலின் கீழ் ஒளிந்து உட்கார்ந்தாள், எப்படியாவது பாட்டி செய்யும் பூஜையைக் காண வேண்டும் என்ற ஆசையில். பாட்டி அறைக்குள் வந்து பூஜை இடத்தைச் சுத்தப்படுத்திச் சிலைக்கு மாலை இட்டாள். அதற்குப் பின்னால் வைத்திருந்த பாட்டனின் படத்தை வெளியே எடுத்து அதனைத் திருப்பினாள். கனகா சத்தம் செய்யாமல் கட்டிலின் அடியிலிருந்து வெளியே எழுந்து பாட்டியின் பின்புறம் பேசாமல் அமர்ந்தாள். பாட்டனின் போட்டோவின் பின்புறம் மற்றொரு போட்டோ இருந்தது. சிப்பாய் உடையில் இருந்த வாலிபனின் போட்டோ அது. அதைத் தன் முன் வைத்துப் பாட்டி பயபக்தியுடன் வணங்கினாள்.

"ஓ, பாட்டி, யார் போட்டோ இது....?" என்று கனகாவால் கேட்காமல் இருக்க முடியவில்லை. பாட்டி திட்டுவாள் என்ற பயமும் அப்போது அவளுக்கு ஏற்படவில்லை.

"அடி திருடி, எப்போ உள்ளே வந்தாய்?"

"பாட்டி! யாருடைய போட்டோ இது? இதனை ஏன் வணங்குகிறாய்?"

பாட்டி அமைதியுடன், "என் வாழ்க்கையிலேயே மிக்க மரியாதைக்கு உகந்த மாபெரும் மனிதர் இவர். இவரால்தான் என் குடும்பம் மலர்ந்து, பழுத்துச் செல்வம் நிறைந்ததாயிற்று" என்றாள்.

"இவர்தான் உன்னைப் படிக்க வைத்துக் கல்யாணமும் செய்து வைத்தாரா?"

"அது ஒரு தனிக் கதை. அப்புறம் கூறுகிறேன்."

"அதெல்லாம் முடியாது. இப்பொழுதே கூறினால்தான் ஆயிற்று!" என்று பிடிவாதமாக உட்கார்ந்து விட்டாள்.

* * *

கல்கத்தா மாநகரத்தில் மக்கள் நடமாட்டம் நிறைந்த இடத்தில் மிகப் பெரியதும் மிகச் சிறியதுமல்லாத இரட்டை மாடி வீடு. அந்த வீட்டின் ஹாலில் ரஞ்சனா தனிமையாக அமர்ந்திருந்தாள். ஹாலின் வைபவமும் இனிமையும் கூடிய சூழ்நிலைக்கேற்ப ரஞ்சனாவின் அழகு மிளிர்ந்தது.

அவள் பாதங்களுக்கு அடியில் மிருதுவான இரத்தினக் கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. சோபாவின் மீது வைத்திருந்த மிருதுவான தலையணையின் மீது ரஞ்சனாவின் மெல்லிய வெண்ணிறக் கை அயர்ந்து படுத்திருந்தது. இவ்வளவு சுகமாக அமர்ந்திருந்தபோதிலும் ரஞ்சனா ஏதோ கவலை கொண்டிருப்பவளைப் போல் தோன்றினாள். கையில் இருந்த புத்தகத்தின் மீதும் அவள் மனம் ஈடுபடவில்லை. முன்னால் இரத்தினக் கம்பளத்தின் மீது வைக்கப்பட்டிருந்த தில்ருபாவின் மீது அவள் பார்வை தேங்கி நின்றாலும் அதனைக் கையில் எடுத்து ஏதாவது ராகம் இசைக்கவும் அவள் மனம் இசையவில்லை. கடைசியில் களைப்புற்றுக் கொட்டாவி விட்டு, "விமலா......!" என்று கூவினாள்.

விமலா கதவின் பின்புறந்தான் நின்றிருந்தாள். அழைத்ததும் முன் வந்து இரத்தினக் கம்பளத்தின் மீது இருந்த தில்ருபாவை எடுக்க முயன்றாள். அதற்குள் அவள், "விமலா! நான் தில்ருபாவை எடுக்கும்படி எப்போது கூறினேன்?" என்றாள்.

"கூற வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது? சென்ற ஒரு மாத காலமாக எனக்கு ஏற்பட்டிருக்கும் அநுபவத்தைக் கொண்டே அறிந்து கொண்டேன். தில்ருபாவை எடுக்கச் சொல்வதும், ஆனால் வாசிக்காமல் மறுபடியும்

வைக்கச் சொல்வதும், அலமாரியிலிருந்து புத்தகம் கொண்டு வர ஆணையிடுவதும், ஆனால் அதைப் படிக்க மனமில்லாமல் கொண்டு போய் அலமாரியில் வைக்க மறு கட்டளையிடுவதும்...'' என்று கூறிய விமலா மனத்துக்குள் சிரித்துக் கொண்டாள். அவள் கூறியதில் பொய் ஒன்றும் கிடையாது. பி.ஏ. படிப்பு முடியும் வரை ரஞ்சனாவின் எல்லா வேலைகளும் ஒழுங்காக நடந்து கொண்டிருந்தன. கல்லூரி வேலை, தில்ரூபா வாசித்தல் போன்ற வேலைகள் யாவும் சரியான நேரத்தில் ஒழுங்காக நடந்து வந்தன. ஆனால் பி.ஏ. பரீட்சை முடிந்ததும் ரஞ்சனாவின் உதாசீனமான 'மூட்' தொடங்கிற்று. முதல் வகுப்பில் தேறியும் அவளுடைய அந்த 'மூட்' மறையவில்லை; மறைவதற்குப் பதிலாக வளர்ந்தது.

ரஞ்சனாவைப் போன்ற இளம் பெண்ணின் உதாசீனத்தின் பொருள் வெளிப்படையானதே. தனக்கு ஏற்ற ஒரு வாலிபனின் துணைக்காக அவள் மனம் ஏங்கலாயிற்று.

விமலா ரஞ்சனாவின் மன நிலையை நன்கு அறிந்திருந்தாள்.

உண்மையில் ரஞ்சனாவைப் போன்ற அழகியை அடைய எத்தனையோ இளைஞர்கள் அந்த மாநகரத்தில் அவா கொண்டிருந்தனர். ஆனால் வெறும் காதல் வெறி கொண்ட துணைவன் அவளுக்குத் தேவையில்லை. நன்கு படித்த, நன்னடத்தையுள்ள, முறையோடு திருமணம் செய்து கொள்ள இசையும் வாலிபனே அவளுக்குத் தேவை. ஆனால் —

ரஞ்சனா ஒரு பாடகிக்குத் திருமணச் சம்பந்தமில்லாமல் பிறந்தவள். படித்தவள், அழகுடையவள். அவளுடைய நடையுடை பாவனைகள் யாவும் நற்குலத்தில் பிறந்த நற்பெண்ணைப் போன்றிருந்தது. ஆகவே, அவள் தாயின் உள்ளத்திலும் ரஞ்சனா முறைப்படி திருமணம் செய்து கொண்டு ஒரு நல்ல இல்லக் கிழத்தியாக வாழ வேண்டும் என்ற விருப்பம் குடிகொண்டது. அவள் ரஞ்சனாவை அதற்கேற்ப வளர்த்து வந்தாள். ஆனால் தாயார் அதிக நாட்கள் உயிரோடு இருக்கவில்லை. ரஞ்சனா இண்டரில் படித்துக் கொண்டிருக்கையில் இறந்து போனாள். இறக்கும்போது, ''ரஞ்சனா, உனக்கு எவ்விதக் குறையும் கிடையாது. நான் எவ்வித கவலையும் வைக்கவில்லை, விமலா உன்னைத் தன் மகளைப்போல் பார்த்துக் கொள்வாள். எஸ்டேட்டின் அலுவல்களைக் கவனிக்க நம்பிக்கையுள்ள வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஒரு விஷயம். நீ நல்ல குலத்து வாலிபனை முறைப்படி திருமணம் செய்து கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் என் ஆத்மாவுக்குச் சாந்தி கிடைக்கும்'' என்றாள்.

ஒரு பாடகியின் பெண்ணுடன் திருமணம் செய்துகொள்ள இன்று எவரும் முன்வரக் கூடும். ஆனால் அன்றைய நிலைமை வேறு. ரஞ்சனாவுக்கு அவ்வித வாலிபன் கிடைக்கவில்லை. ஆகவேதான் அவள் நாட்கள் செல்லச் செல்ல வேதனையுற்றாள்.

இரவில் ரஞ்சனாவும் உள் அறையில் விமலாவும் அமர்ந்து சிந்தனையில் ஆழ்ந்திருந்தனர். திடீரெனச் சத்தமும் கூச்சலும் காதில் விழவே இருவரும் எழுந்து ஜன்னலை நோக்கி ஓடினர். ஜன்னலை அடைந்து இருவரும் வெளியே எட்டிப் பார்த்தனர். மக்கள் பயந்து இங்கும் அங்கும் ஓடிக் கொண்டிருந்தனர். சிலர், ''டேய், வெள்ளையனுக்குக் குண்டு பட்டு விட்டது. வெள்ளையன் மாண்டான். ஓடுங்கள், ஓடுங்கள்'' என்று கத்திக் கொண்டு ஓடினர். அந்தக் கூட்டத்தில் சில வெள்ளை சார்ஜண்டுகளும், இந்திய சார்ஜண்டுகளும் ஓடி ஓடி ஜனங்களைப் பிடித்துக் கொண்டு, ''எங்கே சென்றான், அந்தக் கொலைகாரன்?'' என்று அதட்டினர்.

'' என்ன நடக்கிறது, விமலா ?'' என்று கேட்டாள் ரஞ்சனா.

''புரட்சிக்காரர்களில் யாரோ வெள்ளையன் மீது குண்டு வீசி யிருக்கிறான் போலிருக்கிறது. எல்லாக் கதவுகளையும், ஜன்னல்களையும் சாத்தி விட்டு உள்ளே போய் விடலாம்.''

அப்போது இந்தியாவெங்கும் புரட்சி நடந்து கொண்டிருந்தது. ஆங்கிலேய அதிகாரிகளின் அட்டூழியங்களைச் சகிக்க முடியாமல் அவர்களுடைய ஆட்சியை வெறுத்துச் சுதந்திர உணர்ச்சி கொண்ட அநேக வாலிபர்கள் ஒன்று சேர்ந்து தம் தாய்நாட்டினை வெள்ளையர் ஆட்சியிலிருந்து மீட்க முயன்று வந்தனர். அதிகாரத்தில் உள்ள வெள்ளையனின் மீது குண்டு வீசியும், போலீஸ் ஸ்டேஷன் மீது படையெடுத்தும் புரட்சியைப் பலப்படுத்தி வந்தனர்.

வெளியே செல்வது கடினமாக இருந்ததால் சீக்கிரமே சாப்பாட்டை முடித்துக் கொண்டு ரஞ்சனா தன் படுக்கையறைக்குள் சென்றாள். தூக்கம் வரும்வரை ஏதாவது படித்துக்கொண்டிருக்கலாம் என்று எண்ணி அலமாரியிலிருந்து புத்தகம் ஒன்றை எடுக்கப் போனாள். அதற்குள் யாரோ ஒருவர் புத்தகத்தின் மீது கை வைத்ததாக அவளுக்குத் தோன்றிற்று.

''என்னடி விமலா ?'' என்று கூறிக் கொண்டே நிமிர்ந்து நின்ற ரஞ்சனா வியப்படைந்து அப்படியே கதவோடு சாய்ந்து நின்று விட்டாள். விமலாவுக்குப் பதிலாக நல்ல நிறமும், உடல் அமைப்பும் கொண்ட ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான்.

'' எனக்கு நல்ல பசி, நேற்றிலிருந்து ஒன்றுமே சாப்பிடவில்லை. முதலில் ஏதாவது சாப்பிடக் கொடு. அப்புறம் விவரம் சொல்கிறேன்!'' என்றான் அவன்.

ரஞ்சனா புத்தி கூர்மையும், சமயோசிதமும் உடையவள். அவன் தன்னை இன்னார் என்று வெளிப்படுத்துவதற்குமுன் இவன் யாராக இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டாள். உள்ளே சென்று ஒரு தட்டில் சாப்பாடு கொண்டு வந்தாள். விமலா ஒரு சிறிய மேஜை கொண்டு வந்து வைத்தாள். அவன் சாப்பிட்டு முடித்தபின், ''நான் இங்கிருந்து சீக்கிரம் போய்விட வேண்டும். இங்கு தங்குவது யாருக்கும் நல்லதல்ல!'' என்றான்.

''ஆனால் இப்போது எப்படிப் போவீர்கள் ? வெளியே எங்கு பார்த்தாலும் போலீஸ் காவல் இருக்கிறது. அவர்கள் கண்ணில் படாமல் தப்பி ஓட முடியாதே !'' என்றாள் ரஞ்சனா.

"நடக்க வேண்டியது நடந்தே தீரும். நாட்டின் விடுதலைக்காகப் போரிடும் வீரன் தன் உயிரைப் பொருட்படுத்தமாட்டான்."

"யார் மறுத்தார்கள்? ஆனால் இப்போது உங்களுக்கு ஓய்வு தேவை. இங்கு படுத்துக் கொள்ளுங்கள். நான் விமலாவின் அறைக்குச் செல்கிறேன்" என்று அவனுக்குப் பேசச் சந்தர்ப்பம் தராமல் கதவைச் சாத்திக் கொண்டு சென்று விட்டாள் ரஞ்சனா.

மறுநாள் காலையில் விருந்தாளி படுத்திருந்த அறையிலிருந்து முனகும் சத்தம் கேட்டது. ரஞ்சனா போய்ப் பார்த்தாள். மஹேஷுக்குக் கடுஞ் ஜுரம் கண்டிருந்தது. முகம் வெந்திருந்தது. விமலாவிடம் திரும்பி வந்து, "என்னடி செய்வது விமலா? டாக்டரை அழைப்பதற்கும் இல்லையே!" என்றாள் ரஞ்சனா.

"கவலைப்படாதே ரஞ்சனா! எனக்கு வீட்டு மருந்தும், ஹோமியோபதியும் நன்றாகத் தெரியும். மனத் தளர்ச்சியினால் ஏற்பட்டிருக்கும் ஜுரம் இது. நல்ல ஓய்வு எடுத்துக் கொள்வதே சிறந்த மருந்து" என்றாள் விமலா.

அதற்கு மறுநாள் மாலை மஹேஷ் தலையணையில் சாய்ந்து உட்கார்ந்திருந்தான். ரஞ்சனா அவனுக்குச் சாத்துக்குடிப் பழச் சுளைகளைக் கொடுத்துக் கொண்டிருந்தாள். மஹேஷ், "என் பொருட்டு உனக்கு எத்தனை கஷ்டம், ரஞ்சனா?" என்றான்.

"எனக்கு என்ன கஷ்டம்; உங்களைப் போன்ற தேசபக்தருக்குச் சேவை செய்யும் பாக்கியம் கிடைத்ததே!" என்றாள்.

"ஆமாம், உன் போன்ற ஒரு பெண்ணின் வீட்டில் தங்க இடம் கிடைத்ததே. அது என் பெரும் பாக்கியம். ஆனால் எவ்வளவு பெரிய பழியை நீ சுமந்து கொண்டிருக்கிறாய், ரஞ்சனா! யாருடைய மனத்திலும் சுலபமாகச் சந்தேகம் ஏற்படலாம் — எவ்வளவு பயங்கரமான பழி!" என்றான்.

"நான் இதைப் பொருட்படுத்தமாட்டேன். நானும் அதே பாரதத் தாயின் குழந்தையாவேன்."

"நோயினால் தங்கும்படியாயிற்று. அங்கு என் தோழர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். இரண்டு மூன்று தினங்களில் எப்படியாவது போய்விட வேண்டும்."

இதைக் கேட்ட ரஞ்சனா மௌனமாகிவிட்டாள். அவள் கண்களில் நீர் தேங்கிற்று. இதனைக் கண்ட மஹேஷ், "உனக்கு என்ன ரஞ்சனா....?" என்று கேட்டான்.

ரஞ்சனாவின் இதயம் இன்னும் பொங்கிற்று. கண்ணீர் கன்னங்களின் வழியே வடிந்தது. "பைத்தியக்காரியாக இருக்கிறாயே, ரஞ்சனா! என்னைப் போன்ற புரட்சிக்காரனுடன் மனம் இணைத்து என்ன பயன்? உண்மையைச் சொல்லட்டுமா, சென்ற ஒரு வாரமாக உன்னுடன் இருந்து வருவதால் என் உள்ளத்திலும் உன் மீது பேரன்பு ஏற்பட்டுவிட்டது. ஆனால் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கிறேன். எங்கள் கழுத்தில் விழும் மாலை தூக்குக் கயிறு...." என்று முடிப்பதற்குள்

உலகக் குத்துச் சண்டை சாம்பியன் முகம்மது அலிக்குக் கர்வம் அதிகம்.

"நான் உலகிலுள்ள எந்தத் தெருவில் வேணுமானாலும் எந்த ஒரு விளக்குக் கம்பத்துக்கு அடியில் நின்றாலும், சிறுவர்கள் என்னைப் பார்த்த மாத்திரத்தில் முகம்மது அலி என்று அடையாளம் புரிந்து கொள்வார்கள்" என்றார் அவர்.



ரஞ்சனா தன் கையை அவன் வாயின் மீது வைத்து, "இப்படியெல்லாம் உளறாதீர்கள்" என்றாள்.

மஹேஷ், உடல்நலம் பெற்றபின் ஒரு நாள் "வருகிறேன், ரஞ்சனா..." என்று கூறி விடை பெற்றான். அவன் ஹாலைத் தாண்டுவதற்குள்ளாக ரஞ்சனாவின் தேம்பி அழும் சத்தம் கேட்டது. அவன் கால்கள் அப்படியே நின்று விட்டன. ரஞ்சனாவின் விம்மல் அவனுடைய மன உறுதியை முறித்து விட்டது. திரும்ப ரஞ்சனாவை நோக்கி வந்த அவன் பாதங்கள் அவ்வீட்டை விட்டு வெளியேற மறுத்தன.

மஹேஷும் ரஞ்சனாவும் இணைந்து வாழத் தொடங்கினர். அவ்விருவருடைய மண வாழ்க்கைக்குச் சாட்சியாக விமலா மட்டும் அங்கு இருந்தாள்.

அன்று மத்தியானம் கண்ணாடியில் ரஞ்சனா ஒப்பனை செய்து கொண்டிருந்தாள். புத்தகத்தை மூடிவிட்டு மஹேஷ் குதூகலத்துடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். காதல் வெற்றி பெற்றுவிட்டதால் ரஞ்சனாவின் சௌந்தர்யம் இன்னும் அதிகமாகவே மலர்ந்திருந்தது.

அப்பொழுது, "ஐயா, வெளியே யாரோ உங்களைக் காண வந்திருக்கிறார்கள்!" என்று விமலா கூறினாள். உடனே தன் ஒப்பனையை முடித்துக் கொண்டு ரஞ்சனா வெளி ஹாலுக்கு வந்தாள். அங்கு போலீஸ் உடையில் ஒரு வாலிபன் நின்று கொண்டிருந்தான். ரஞ்சனாவைக் கண்டதும் அவன், "தயவுசெய்து மஹேஷை வெளியே வரச் சொல்லவும்; அவனை அழைத்துச் செல்ல வந்திருக்கிறேன்" என்றான் அதிகாரத்தோடு.

"யார்? மஹேஷா?" என்று ஒன்றும் தெரியாதவளைப் போல் ரஞ்சனா கேட்டாள்.

"என்னை ஏமாற்ற முயல வேண்டாம். மஹேஷின் குழுவுக்கு நான் தலைவன். மஹேஷ் இங்கே உன் வீட்டில்தான் இருக்கிறான். அவன் எங்களிடம் நேர்மையோடு நடந்துகொள்ள வேண்டும். அவன் செய்திருக்கும் சத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். உடனே வெளியே வரும்படி அழைக்கவும். *அதிக நேரம் காத்திருக்க எனக்கு நேரமில்லை."

இதைக் கேட்ட ரஞ்சனாவின் கைகால்கள் நடுக்கமுற்றன. அவள் அப்படியே சோபாவில் உட்கார்ந்தாள். அவனைப் பொருட்படுத்

தாமல் அந்த வாலிபன் உள் அறைக்குச் சென்றான். ''யார் சர்தார்ஜியா?'' ஆயாசமாக அமர்ந்திருந்த மஹேஷ் உடனே எழுந்து நின்று சேனை முறைப்படி வணங்கினான்.

''புறப்படு, ஐந்தே நிமிஷங்களில் தயாராகி விடு'' என்று கட்டளை இட்டார் சர்தார்ஜீ.

''வேண்டாம், வேண்டாம், சர்தார்ஜீ! அவரை இங்கிருந்து அழைத்துப் போகாதீர்கள்!'' என்று சர்தார்ஜியை மன்றாடிய ரஞ்சனா மஹேஷின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

''மன்னிக்கவும், சகோதரி! நாட்டுப் பணிக்காக எடுத்துக் கொள்ளும் நோன்பு மிக உக்கிரமானது. புரட்சி தேவதை கடுங் கோபத்தில் இருக்கிறாள். குழுவின் கொள்கைகளைக் கடைப்பிடித்தே தீரவேண்டும். கொள்கைகளை மீறுபவனுக்குத் தக்க தண்டனை கிடைத்தே தீரும். அதனை அவன் அனுபவித்தே ஆக வேண்டும். மஹேஷ்! குழுவின் கொள்கையை ஒரு முறை மீறி விருக்கிறாய். இப்போது தாமதிக்காதே!'' என்றான்.

''விடு, ரஞ்சனா! என்னைப் போகவிடு; நான் போயே ஆகவேண்டும்'' என்றான் மஹேஷ்.

ரஞ்சனா எழுந்து சர்தார்ஜியின் கால்களைப் பிடித்து, ''சர்தார்ஜீ! நீங்கள் புரட்சித் தேவதையை வழிபடுபவர்; நாட்டின் தொண்டர், என் பொருட்டு மஹேஷ் தன் கடமையை மறந்து இப்படி இரையாவது உண்மையில் நியாயம் அல்ல என்பதை நான் உணர்கிறேன். என் மோக வலையில் மஹேஷைச் சிக்க வைத்துப் பெரும் தவறு செய்து விட்டேன். ஆனால் சர்தார்ஜீ, நீங்கள் என்னைச் சகோதரி என்று அழைத்திருக்கிறீர்கள். அண்ணா! இந்தச் சகோதரிக்கு ஒரு பிச்சை இடுங்கள். மஹேஷும் நானும் ஒருவருக்கொருவர் விரும்பி மனத்தினால் மணந்து கொண்டோம். இப்போது முறைப்படி எங்கள் திருமணம் நடக்க வேண்டிய அளவு மட்டும் நேரம் கொடுங்கள். எங்கள் திருமணம் நடந்ததும் என் தாயின் ஆத்மாவுக்குச் சாந்தி கிடைத்துவிடும். நான் புரட்சி வீரன் மஹேஷின் மனைவி என்ற எண்ணத்தோடு வாழவும் முடியும். எங்கள் வருங்காலத்துக் குழந்தை தன் தகப்பனின் பெயர் கூறிக் கொள்ள முடியும். அண்ணா! அடிமை நாட்டினை விடுவிக்கும் மகாவிரதம் பூண்ட மாபெரும் சூரவீரரான நீங்கள் உங்கள் சகோதரியின் இந்தச் சிறிய வேண்டுகோளை ஏற்கமாட்டீர்களா?'' என்று சர்தார்ஜியின் கால்கள் மீது கண்ணீர் வடித்தாள்.

சர்தார்ஜியின் முகத்தில் தோன்றியிருந்த உக்கிரம் மறைந்தது. ரஞ்சனாவின் கைகளிலிருந்து தன் கால்களை விடுவித்துக் கொண்டு, ''எழுந்திரு சகோதரி, எழுந்து திருமணத்துக்கு ஏற்பாடு செய், இன்று நான் உன் விருந்தாளி. உடனடியாகச் செய்'' என்றார்.

விமலா எல்லா ஏற்பாடுகளும் உடனடியாகச் செய்து முடித்தாள். ஒரே ஒரு புரோகிதர் மட்டும் வரவழைக்கப்பட்டார். பெண்ணும் மாப்பிள்ளையும் மண மாலை மாற்றிக் கொண்டனர். லாஜ ஹோமம் முடிந்தது. சப்தபதி தொடங்கிற்று..... மஹேஷின் கையில் தன் கையைக் கொடுத்து, சப்தபதிக்காக எழுந்து நின்ற ரஞ்சனாவால் தன் மனத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. ஒன்று சேர்ந்து நடப்பது நம் வாழ்விலேயே இதுதான் கடைசி, கடைசித் தடவை என்று நினைத்த மாத்திரத்தில் அவள் கண்களிலிருந்தும் கண்ணீர் கொட்டத் தொடங்கிற்று. விமலா தேம்பி அழத் தொடங்கினாள். கைக்குட்டையினால் கண்களைத் துடைத்துக் கொண்டு மஹேஷ் காலெடுத்து வைக்க, புரோகிதர் கம்பீரமாக மந்திரம் சொல்ல, ரஞ்சனாவுக்கோ ஒன்றும் தோன்றவில்லை. மஹேஷின் கையின் உதவியினால் அவள் தள்ளாட்டத்துடன் கால்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள். அவ்வளவுதான்! சப்தபதி முடிந்தது. உடனே ரஞ்சனாவின் கையைவிட்டு மஹேஷ், ''புறப்படுங்கள் — சர்தார்ஜீ!'' என்றான்.

ஆனால் சர்தார்ஜீ அங்கே இருக்கவில்லை. எங்கும் காணப்படவில்லை. கண் முன் நடந்தேறிய மங்கள விவாகத்தின் கருணை வெள்ளம் பொங்கும் அந்த வைபவத்தைக் கண்டு இதுவரை வச்சிரத்தைக் காட்டிலும் உறுதியாக இருந்த அந்த உத்தமனின் மனம் பூவைக் காட்டிலும் மிருதுவாகிவிட்டது.... இதனால் புதிதாக மணந்த அந்தத் தம்பதிகளுக்கு, ''வாழுங்கள், சுகமாக'' என்று உளமாற ஆசீர்வதித்து யாருக்கும் தெரியாமல் அங்கிருந்து போய்விட்டார்.

''**பா**ட்டி, எவ்வளவு தனிப்பட்டதாகவும் நவீனமானதாகவும் இருக்கிறது உன் கதை! நீ பூஜை செய்யும் அந்தப் போட்டோதானே சர்தார்ஜீ — தாத்தாவின் போட்டோவுக்குப் பின்னால்!''

''ஆம், குழந்தாய், சர்தார்ஜீ என் வரையில் கடவுளுக்கு ஒப்பானவர். அவர் அப்போது உன் தாத்தாவை மன்னித்ததுமல்லாமல் அந்த வெள்ளையனைக் கொன்ற குற்றத்தையும் தம் மீது ஏற்றுக் கொண்டார். அவர் வெள்ளையரின் கையில் பிடிபட்டதால்தான் நாங்கள் எவ்வித பயமுமின்றி இல்வாழ்க்கையைச் சுகமாக நடத்த முடிந்தது. உன் தாத்தாகூட இந்தப் போட்டோவை வணங்காமல் சாப்பிட மாட்டார்.''

''பாட்டி! உன்னிடம் பரிசு கேட்கலாமா?'' என்று கனகா கேட்டாள்.

''கேளேன். கொடுக்க ஏற்றதாக இருந்தால் கண்டிப்பாகக் கொடுத்து விடுகிறேன்.''

''உனக்குப்பின் சர்தார்ஜியின் இந்தப் போட்டோ எனக்குக் கிடைக்க வேண்டும். இவ்வளவுதான் என் விருப்பம். நம் குல தெய்வம் அல்லவா இவர். நானும் இவரைப் பூஜித்துக் கொண்டிருப்பேன்.''

''இன்று நீ என்னைக் கேட்டதைப்போல் உன் வாரிசுகள் உன்னிடம் கேட்டால்...?''

''உன்னுடைய இந்தக் கதையைக் கூறுவேன்'' என்று சிரித்தாள் கனகலதா.

தமிழாக்கம்: **ரா.க.ரா. கணேத்தே**

# சரணமென்று பற்றிவிட்டோம்

டி. வி. சுவாமிநாதன்



ஸ்ரீ பெரியவர்கள் ஜயந்தி :
28—5—72

ஆருயிர்க்கு உற்றதுணை;
    அறம்செய்த நெடியதவம்;
பேரருளின் ஊற்றுக்கண்;
    பெரியவாள் என்றிந்தப்
பார்புகழும் மறைமுனிவன்;
    பரித்யாக மூர்த்தி;இன்று
சீர்திகழும் காஞ்சிநகர்
    சிவ:ஸ்தானம் குடிகொண்டான்

கார்காணாத் தோகைபோல்
    கண்ணிழந்த வதனம்போல்
நீர்வறண்ட நிலத்தைப்போல்
    நெறிகுறைந்து மறம்மிகுந்து
நலிவுற்ற மனிதகுலம்
    நலம்பெறவே அவதரித்துக்
கலியகற்றும் யுகபுருஷன்;
    கண்காணும் தெய்வமிவன்.

மதுரக் குரலொலித்தும்
    மௌன மொழியுரைத்தும்
இதயத் தந்திகளில்
    இசையெழுப்பும் மாகலைஞன்;
வேதஒளி பரப்பி—இருள்
    வினைதீர்க்கும் ஞானகுரு;
பாதமலர் தோய்ந்தஇடம்
    பவித்திரமாம் திருக்கோவில்

உடல்வாட நோன்பிருந்து
    உயிர்வாழச் செயல்புரியும்
கடலென்ன விரிந்தபெரும்
    கருணாம்ருத வாரிதி;மெய்த்
தவவெற்பின் சிகரத்தில்
    தண்ணளியின் அருட்ஜோதி;
குவலயத்தோர் சித்தத்துக்
    குணதிசையில் எழுங்கதிரோன்.

கவலைக் கடல்கடியும்
    கரத்தேந்தும் அறச்செங்கோல்
அவமானைச் சுழல்காற்றில்
    அலைவாயில் பட்டவரைக்
கரைசேர்க்கும் தோணிஇரு
    கமலமலர்ப் பாதங்கள்
சரணமென்று பற்றிவிட்டோம்
    சங்கரனே! சற்குருவே!



# இளந்துறவி வாழியவே!



காவி தரித்துலவும்
   காஞ்சித் தவக்குமரன்;
தேவி திரிபுரையின்
   திருமுன்னர் வீற்றுமலர்
தூவிப் பூஜைசெயும்
   தூயவனின் விழிநோக்கில்
ஆவி புளகமுறும்;
   அந்தராத்மா துயிலுணரும்.

ஆயிரம்பேர் கூடிநின்று
   அஞ்சலிக்கும் போதினிலும்
நேயமழை பொழிகின்ற
   நேத்திரங்கள் தனித்தனியே
தோய்ந்து தண்மைதரும்;
   தூரத்தில் நிற்பவனும்
பாயும்அருள் வெள்ளஅலை
   பட்டு அகங்குளிர்வான்.

தவமென்னும் குன்றேறித்
   தலைசுரக்கும் கருணைமுகில்;
சிவபெருமான் கயிலைமலைச்
   சிகரத்தில் இருந்திறங்கி
அவதாரம் செய்துஎமை
   ஆட்கொள்ளும் குருதேவன்
உவந்தெடுத்த வாரிசுநம்
   உளம்புகுந்து குடிகொள்வான்.

விடமுண்ட கண்டனுக்கு
   வில்வதளம் அர்ச்சித்து
இடம்கொண்டு சிவனுயிர்
   இயக்குவிக்கும் சக்திக்கு
முலைமுறியா அட்சதையும்
   முழுமஞ்சள் குங்குமமும்
புனைந்தெடுத்து பூஜித்துப்
   புண்ணியராய் எமைஆக்கும்

இளந்துறவி வாழியவே!
   இந்த்ரசரஸ் வதிவரிசை
வளம்பெறவே முற்றவத்தால்
   வந்துதித்தோன் வாழியவே!





(திருவனந்தபுரம் கரமனையில் 29-3-72 அன்று காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் சங்கர பகவத்பாத பாதுகா மண்டபத்துக்குத் தமது திருக்கரங்களால் அஸ்திவாரக் கல் இட்ட சமயம் வாசித்து அர்ப்பணிக்கப்பட்டது.)



குமாரி யஷூமதி
த்ரிகம்லால் சேட்.

“பிரவுன் & போல்ஸன்
கஸ்டர்டு பவுடர் உபயோகித்து
இன்சுவையுள்ள பர்ஃபியை
நான் வீட்டிலேயே
தயாரிக்கிறேன்”

என்கிறார், குஜராத்திலுள்ள
கோண்டலைச் சேர்ந்த
குமாரி யஷூமதி
த்ரிகம்லால் சேட்.




# பச்சைப் பட்டாணி பர்ஃபி

தயாரிக்க உதவுவது

# பிரவுன் & போல்ஸன்

கஸ்டர்டு பவுடர்





# நாம் பெருமைப்பட வேண்டிய இரண்டு நாமங்கள்

கடலைக் கடைந்து தோன்றிய அம்ருதத்தை தேவர்கள் அருந்தியதாகப் புராணம். பகவானைக் காதலித்து அதனின்று உண்டாகும் மகிழ்ச்சியும் ஓர் அம்ருதம். பகவானைக் காதலித்து அடையும் அம்ருதத்துக்கும் கடலைக் கடைந்து தேவர்கள் அருந்திய அம்ருதத்துக்கும் ஒரு பேதம். தேவர்கள் அருந்திய அமுதம் தெவிட்டினாலும் தெவிட்டலாம். பகவானைக் காதலித்து அடையும் அமுதம் தெவிட்டவே தெவிட்டாது. இதை வைத்துத்தான் விஷ்ணு பகவானுக்குத் தமிழ் நாட்டில் ஒரு பெயர் ஆரா அமுதம் என்று. பாரதத்தில் அடங்கிய சஹஸ்ர நாமங்களில் இதைப் போன்ற பெயர் இல்லை. 'அம்ருதம்' என்று மட்டும் இருக்கிறதே தவிர 'ஆராத அம்ருதம்'என்று இல்லை. இதைப் பற்றிப் பெருமையுடன் ஈடு வியாக்கியானத்தில் வியாக்கியான ஆசிரியர் எழுதியிருப்பது தமிழர் படித்து மகிழ வேண்டும்.

'வடதேசத்திலே லோகசாரங்க மஹா முனி வசித்துக் கொண்டிருக்க, இங்கேயுள்ள ஒருவன் அங்கு ஏறச் செல்ல, "பிள்ளாய்! தென் தேசத்தில் விசேஷம் என்?" என்று கேட்க, "திருவாய்மொழி என்ற ஒரு பிரபந்தம் அவதரிக்க, அதனைச் சிஷ்டர்கள் மேற்கொண்டு போரக் கொண்டாடிக் கொடுபோகா நின்ருர்கள்" என்ன, "அதிலே உனக்குப் போவது ஒரு பாசுரத்தைச் சொல்லிக் காணாய்" என்ன, "'ஆராவமுதே' என்கிற இத்துணையே எனக்கும் போம்" என்ன, 'நாராயணன் முதலான நாமங்கள் கிடக்க, இங்ஙனேயும் ஒரு பெயர் உண்டாவதே' என்று அதனைக் காண மிக்க ஆவலுடையவராய், இச்சொல் நடையாடுகிற தேசத்து ஏறப் போவோம்' என்று அப்பொழுதே புறப்பட்டுப் போந்தார்.'

(எட்டாந் திருவாய்மொழி - பா. 1)

இதைப் போலவே "தாயும் ஆனவர்" என்று மகாதேவனுக்குத் தமிழர்கள் ஒரு நாமம் சூட்டி மகிழ்கிருர்கள். இதுவும் வடமொழிப் புராணங்களில் இல்லாத ஒரு சிறந்த நாமம், தந்தை மட்டும் அல்ல, அவன் தாயும் ஆவான் என்கிற பொருளைத் தரும் சிறந்த பெயர். இதை ஒட்டி கதையும் கோயிலும் தோன்றி யிருக்கின்றன. ஒரு கேள்வி எழும். பெயர் முந்தி தோன்றிற்ரு அல்லது கதையும் கோயிலும் முந்தி தோன்றி அதை யொட்டிப் பெயர் வழக்கத்தில் வந்ததா என்று. என் அபிப்பிராயம், பெயர் முந்தி தோன்றி அதையொட்டிக் கதையும் கோயிலும் தோன்றின என்று. விஷ்ணு சஹஸ்ரநாமத்தில், "அம்பஹ" என்று தாய் என்கிற சொல்லுக்கு ஆண்பால் உருவம் தந்து ஆயிரம் நாமங்களில் ஒன்ருக இருக்கிறது. ஆனல் தாயுமானவர் என்கிற நாமம் பகவானுக்குத் தமிழர் தந்திருப்பது விசேஷம். ஆரா அமுதம் என்று பகவான் விஷ்ணுவையும், தாயும் ஆனவர் என்று பகவான் மகாதேவனையும் பூஜிப்பது தமிழரின் தனிச் சிறப்பு.



# இளைஞர் சமுதாயம்

## 7. யாருக்கு நூல் நிலையம்?



கலைப் பொருள்கள் பற்றி விளக்கம் தரப்படுகிறது.

**எ**ன் நண்பர் ஒருவர் என்னைச் சந்திக்கும் போதெல்லாம் ''நீங்கள் ஒன்றுமே எழுதுவ தில்லையே! ஒவ்வொரு வாரமும் பொருளடக் கத்தில் உங்கள் பெயர் இருக்கிறதா என்று பார்ப்பேன்'' என்பார். (இதுபோன்ற நண்பர் களின் தொல்லையை முன்னிட்டுத்தான் பல பத்திரிகைகளில் பொருளடக்கத்தையே திருத்தி விட்டார்கள்!) சென்ற வாரம் அவ ரைச் சந்தித்தேன். அவராகவே இளைஞர் சமுதாயம் பற்றிய என் கட்டுரைகளைப் புகழு வார் என்று எதிர்பார்த்தேன். ஊஹூம்! மூச்! உடனே நானாகவே சிறிதும் கூச்சமோ, தயக்கமோ இன்றி ''இளைஞர் சமுதாயத்தைப் பற்றி எழுதி வருகிறேன், அதிலும் வருகிற வாரம் வாலாஜாபாத் யுனெஸ்கோ கிளப் பற்றி எழுதுகிறேன். அவசியம் படித்துப் பாருங்கள்'' என்று சொன்னேன். தயக்கமோ கூச்சமோ இன்றி இப்படி நான் பேசியதற்குக் காரணம் இல்லாமல் போகவில்லை. வாலிப உலகின் எழுச்சியும் நற்பணிகளும் இந்த ஐந் தாறு வாரங்களுக்குள் என் மனத்தை அந்த அளவுக்கு ஈர்த்துப் பெருமை கொள்ள வைத் திருந்தன. அதிலும் வாலாஜாபாத் யுனெஸ்கோ கிளப்பைப் பார்த்த பிறகு இளைஞர் சமுதாயத்திடம் எனக்குப் பெரு மதிப்பே பிறந்து விட்டது.

**செ**ங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த வாலாஜாபாத்திலுள்ள உபாத்தியாயர்களின் யுனெஸ்கோ கிளப்புக்குச் சென்றதும் அந்தச் சூழ்நிலையே சற்றுப் புதுமையாக இருந்தது.

சங்கத்தின் செயலாளர் புலவர் இரா. முத்துக்குமாரசாமியின் இல்லத்தில்தான் சங் கத்தின் நூல் நிலையம் இயங்கி வருகிறது. அரிய ஆங்கில நூல்களெல்லாம் அமெரிக்கா விலிருந்து வந்தவை, உள்ளே வைக்கப்பட் டிருந்தன.

புலவர் இரா. முத்துக்குமாரசுவாமி, திருமதி கோமதி, அறிவொளி (மகள்)



''உங்கள் சங்கத்தின் நடவடிக் கைகள் என்னவென்று கூறுகிறீர் களா?'' என்று கேட்டேன்.

''இதில் அங்கத்தினர்கள் எல் லாம் உபாத்தியாயர்கள். ஓய்வு நேரத்தில் எல்லாம் படிப்பதுதான் எங்கள் சங்கத்தின் முக்கிய நட வடிக்கை'' என்றார் செயலாளர்.

''நான் உங்கள் பொழுதுபோக் கைப் பற்றிக் கேட்கவில்லை, ஸார்! உங்கள் சங்கம் என்ன செய்கிறது என்று கேட்கிறேன்'' என்றேன்.

உடனே செயலாளரின் முகத் தில் சீற்றத்தின் சாயல் தெரிந்தது.

''பொழுதுபோக்கா? நாங்கள் இங்கு பொழுது போதவில்லையே என்று தவிக்கிறோம், ஸார்! பொழுதுபோக்குக்காகப் படிப்ப தாகச் சொல்வது முழுச் சோம் பேறிகளின் கூற்று. அறிவு வளர்ச் சிக்காகத்தான் படிக்க வேண்டும். அதுவும் உபாத்தியாயர்கள் நிறை யப் படிக்க வேண்டும். எங்கள் நூல் நிலையத்தில் மாணவர்களுக்கு



## வருமான வரி கட்டாத பிரதம மந்திரி!

வருமான வரி அதிகாரிகள் செல்வந்தர்களின் வீடுகளுக்குள் புகுந்து சோதனை போடும் நாடு நம் நாடு. இதே சமயத்தில் மற்ற நாடுகளில் வருமான வரி விஷயம் எப்படி இருக்கிறது என்று பார்ப்போமா?

பஹாமா தீவுகளில் வருமான வரியே கிடையாது.

பிரான்ஸில் நாம் எத்தனை வருஷங்கள் வரி ஏமாற்றி யிருந்தாலும், பிடிபட்டால் கடைசி நான்கு வருஷங்களுக்கு மட்டும் வரி கட்டினால் போதும். 27 வருஷங்களாக வரி கட்டாமல் இருந்த ஒரு பெண், சமீபத்தில் அகப்பட்டுக்கொண்டபோது கடைசி நான்கு வருஷங்களுக்குத்தான் வரி கட்டினாள். ஆக 23 வருட வரி அவளுக்கு லாபம்!

பிரான்ஸில் எத்தனையோ செலவுகளைக் கணக்கில் காட்டி வரியைக் குறைக்க வழி இருக்கிறது. ஆகவே சட்டத்துக்கு உட்பட்டே அவர்கள் வரி கட்டாமல் தப்பித்துக் கொள்கிறார்கள். உதாரணம்: பிரான்ஸின் பிரதம மந்திரி 1966லிருந்து 1969 வரையில் மூன்று வருஷங்களுக்கு வரியே கட்டவில்லை!

பிலிப்பைன்ஸ் தீவுகளில், வேலையில்லாத சகோதரர்கள், கல்யாணமாகாத சகோதரிகள், மாமனார்கள், மாமியார்கள் இவர்களுக்குச் செலவழிப் பதை யெல்லாம்கூடக் கணக்கில் காட்டி வரி விலக்குப் பெறலாம். இன்னும் இரவு கேளிக்கை ஷோப் செலவுகள், சூதாட்ட நஷ்டங்கள் இவற்றையும் செலவாகக் காட்டலாம்!

நைஜீரியாவில் வருமான வரி பாக்கியுள்ள பணக்காரர்கள் அரசாங்க விருந்துகளுக்கு அழைக்கப்படுவதில்லை. இதை அவமானம் என்று கருதி, இவர்கள் வருமான வரியில் பாக்கி வைப்பதில்லை.

உகாண்டாவில் திடீரென்று போலீஸ்காரர்கள் தெருவை மறைத்து நின்றுகொண்டு எல்லோரையும் சோதனை போடுவார்கள். வருமான வரி கட்டிவிட்டதாகக் கையில் ரசீது இல்லாதவர்கள் அங்கேயே கட்டுக் கொல்லப்படுவார்கள்.

ஆதாரம்: 'டைம்' பத்திரிகை - உதவி: நாடோடி

---

வேண்டிய நூல்களே கிடையாது. எல்லாம் உபாத்தியாயர்கள் படிக்கவேண்டிய அரிய நூல்கள்தாம்.''

''மாணவர்களைத்தான் பெற்றோர்களும் சரி, உபாத்தியாயர்களும் சரி, 'படி படி' என்று சொல்லிக் கேட்டிருக்கிறேன். நீங்கள் சொல்லுவது புதுக் கருத்தா யிருக்கிறதே!''

''இதில் புதுமை எதுவும் இல்லை. உபாத்தியாயர்கள் கல்வி கேள்விகளில் தேர்ந்தவர்களா யிருந்தால்தான் மாணவர்களுக்கு அவர்களிடம் மதிப்பும், மரியாதையும் ஏற்படும். உபாத்தியாயர்கள் அனைவரும் நன்றாய்ப் படித்தவர்களா யிருந்தால், இப்பொழுது எங்கு பார்த்தாலும் காணப்படும் மாணவர் அமைதியின்மை இருந்த இடம் தெரியாமல் போய் விடும்.''

''உபாத்தியாயராக வருபவர் ஆசிரியப் பயிற்சி தேறிய பிறகுதானே வருகிறார்? அவரைப் படிக்காதவர் என்று எப்படிச் சொல்லலாம்?'' என்று கேட்டேன்.

''சரியாய்ப் போயிற்று! ஆசிரியர் பயிற்சிப் பரீட்சையில் தேறிவிட்டால் போதுமா? ஓர் உபாத்தியாயர் என்றால் அவருக்குக் கூர்த்த மதி அவசியம் ஸார்!

''தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு''

என்ற வள்ளுவர் வாக்கைச் சிந்தித்துப் பாருங்கள். உபாத்தியாயர்களுக்காகத்தான் அவர் இந்தக் குறளைச் சொன்னார் என்று நினைக்கிறேன். எரியும் விளக்கிலிருந்துதானே இன்னொரு விளக்கை ஏற்ற முடியும்?''

''ஆகவே, உபாத்தியாயர்களுக்குப் பொது அறிவு வளர அவர்கள் பல நூல்களையும் ஓய்ச்சல் ஒழிவின்றிப் படித்துக் கொண்டே யிருக்க வேண்டும் என்கிறீர்கள்.''

''ஆமாம். எங்கள் சங்கத்தின் நோக்கமே ஆசிரியர்களின் அறிவு வளர்ச்சிதான். 1969ம் ஆண்டில் இது தொடங்கப்பட்டது. பல நாடுகளைப் பற்றியும், பல பொருள்களைப் பற்றியும் தகவல்களைச் சேகரித்துக் கண்காட்சி அமைத்திருக்கிறோம். இந்தக் கண்காட்சி நடமாடும் கண்காட்சி. பல ஊர்களுக்கு அடிக்கடி கண்காட்சியைக் கொண்டுபோய் நடத்தி வருகிறோம். எங்கள் சங்கத்தில் கல்லூரி ஆசிரியர்கள், உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள், ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் எல்லோரும் அங்கத்தினர்களாகலாம்.''

''அறிவு வளர்ச்சிக்காகச் செய்யும் இந்த அரும் பணியில் ஈடுபாடு எப்படி ஏற்பட்டது?''

''தமிழ் நாடு பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு நெ. து. சுந்தரவடிவேல் அவர்கள் சில ஆண்டுகளுக்கு முன்பு 'ஆளுக்கு ஒரு நூலகம்' என்ற திட்டத்தைத் தொடங்கி வைத்த போது கூறிய கருத்துக்கள்தாம் இந்தச் சங்கம் தோன்றக் காரணமாயிருந்தது.''

யுனெஸ்கோ ஆசிரியர்கள் சங்கத்துக்கு நூற்று முப்பது நாடுகளுடன் தொடர்புள்ளது. இந்தச் சங்கத்தில் பெண் அங்கத்தினர்கள் இருபது பேர் இருக்கின்றனர். அத்தனை பேர்களும் உபாத்தியாயினிகள்.

செயலாளர் திரு முத்துக்குமாரசாமியின் மனைவி திருமதி கோமதியும் ஓர் அங்கத்தினர்.

அனைத்து நாடுகளின் பள்ளிகளையும் இணைத்துப் பணியாற்றத் திட்டம் இருக்கிறது. நம் பண்பாடுகளை அயல் நாட்டவர்களுக்குப் பரப்புவது சங்கத்தின் முக்கிய நோக்கம்.

அமெரிக்காவில் யுனெஸ்கோவின் ஆக்டிங் டைரக்டர் ஜெனரலா யிருக்கும் திரு மால்கம் ஆதிசேஷய்யாவின் ஆசியுடன் இந்தச் சங்கம் செயல்படுகிறது. ஏழு தலைமை ஆசிரியர்கள், பதினெட்டு பள்ளி உபாத்தியாயர்கள் இந்தச் சங்கத்துக்கு உறுதுணையாக இருக்கின்றனர்.

''இந்தச் சங்கத்தை நடத்தப் பணம் வேண்டுமே! அதற்கு என்ன செய்கிறீர்கள்? அரசு மான்யம் வழங்குகிறதா?'' என்ற மிகவும் முக்கியமான கேள்வியைக் கேட்டதும் ''அரசு மான்யம் எதுவும் கிடையாது. Indian National Commission, Government of India மூலம் இச்சங்கம் இயங்கி வருகிறது. மூன்று ஆண்டுகள் முடிந்த பிறகுதான் அயல்நாட்டு நிதி உதவியை எதிர்பார்க்க முடியும். இப்பொழுது நாங்கள் எங்கள் கைப் பணத்தைக்

உங்கள் வாய்க்கு பூரண பாது
காப்பு அளிக்கும் டூத் பேஸ்ட் இதுவே—**நீம்**

நீம் டூத் பேஸ்ட் உங்கள் பற்களை சுத்தம் செய்வதுடன் வேறு பல நன்மைகளையும் தருகின்றன. அதிலுள்ள சுகாதாரத்திற்கேற்ற அரிய பொருள்கள் உங்கள் பற்களை பலப்படுத்தி, ஈறுகளில் விஷக் கிருமிகள் தொத்திக் கொள்ளாமல் தடுத்து, கெட்ட சுவாசத்தை அறவே அகற்றி வாயை தூய்மை படுத்துகிறது.




இது ஒரு கல்கத்தா
கெமிகல் தயாரிப்பு.

NTP/2-70 Tam

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
களிம்பு
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

Bensons-2141 TAM

---

## ஆஸ்துமா நிவாரண மூலிகை

ராஜஸ்தான் பிரபல அரசியல் சமூகத் தலைவர் காலஞ்சென்ற ஸ்ரீ சம்புநாத் அவர்களின் பேரன் ஸ்ரீ கேசவ் மோஹன்லால் ஏழைகளுக்கு ஆஸ்துமா நிவாரண மூலிகை விநியோகிக்கிறார். ஸ்ரீ சம்புநாத் அவர்களுக்கு இந்த மூலிகை ஒரு சந்நியாசியால் கொடுக்கப்பட்டு கடந்த 40 ஆண்டுகளாக இலவசமாக விநியோகிக்கப்பட்டது. இத்தன்னலமற்ற சேவைக்கு அரசாங்கம் உபகாரச் சம்பளம் அளித்தது. ஆனால் இந்த நற்பணியை அவர் தன் பேரனிடம் ஒப்படைத்து விட்டு துறவியானார். தற்பொழுது இப் பணியை பேரன் நடத்துவதோடு இதற்கு பண உதவி செய்யுமாறு தனவந்தர்களைக் கேட்டுக் கொள்கிறார். மூன்று டோஸ் மருந்து சாப்பிட்டதுமே ஆஸ்துமாவினால் அவதிப்படும் பலர் நிவாரண மடைந்துள்ளனர். ஆஸ்துமாவினால் அவதிப்படு பவர்கள் மூலிகைக்கு மேற்கண்ட விலாசத் திற்கு ஆங்கிலத்தில் எழுதவும்.

SRI KESHAV MOHAN LAL
P. B. No. 11463
CALCUTTA-6

மேற்கு வங்காள சங்கங்கள் ரிஜிஸ்ட்ரேஷன் ஆக்ட் 1961 கீழ் நிறுவப்பட்ட பாபா ஸ்ரீ சம்புநாத் சேவா கேந்திராவினால் வியாதியஸ்தர்கள், டாக்டர்கள், மருத்துவர்கள் அளிக்கும் தன் கொடையின் மூலம் ஆஸ்துமாவினால் அவதிப்படு பவர்களின் நலனுக்காக வெளியிடப்பட்டது.

NAA/E/72

கொண்டுதான் நடத்தி வருகிறோம். மாதம் ஒரு கூட்டம் போடுவோம்'' என்றார் செயலாளர்.

செயலாளரிடமிருந்து இன்னும் சில தகவல்கள் கிடைத்தன.

யுனெஸ்கோ ஆசிரியர்கள் சங்கம் எந்த அரசியல் கட்சியையும் சார்ந்ததல்ல.

இந்தச் சங்கத்திலிருந்து அயல்நாடுகளுக்கு எழுதப்பட்ட கடிதங்கள் ஐந்நூற்று நாற்பத்தேழு.

உள்நாட்டுக் கடிதங்கள் நானூற்று அறுபத்தேழு.

மொத்தம் தபாலுக்காகச் செலவிடப்பட்ட தொகை எவ்வளவு தெரியுமா? ரூ. 520.

பிலிப்பைன்ஸ"க்கு இந்தச் சங்கத்தார் ஒரு கடிதம் எழுதினார்கள், அந்த நாட்டைப் பற்றிய பல விஷயங்களையும் விளக்கும் கவர்ப் படங்கள் வேண்டும் என்று. அந்நாட்டினர் படங்கள் மட்டுமல்ல; கலையழகு மிகுந்த பொம்மைகளையும் நகாச வேலைகள் செய்யப்பட்ட பித்தளைத் தட்டுக்களையும் அனுப்பி வைத்தனர். அவற்றுக்கு 'டூட்டி'யாக ஐந்நூறு ரூபாய்க்கு மேல் கட்டி எடுக்க நேர்ந்தது. ஆனால் அந்தத் தொகையை மத்திய அரசு இவர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விட்டது.

இச்சங்கத்தின் செயலாளர் புலவர் இரா. முத்துக்குமாரசுவாமி சங்கத்தின் நலன் கருதி அயராது உழைப்பவர். சுமார் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட ஆங்கில நூல்கள் அவர் வீட்டுச் சின்ன அறையில்தான் சிறைப் பட்டுக் கிடக்கின்றன. இட வசதி ஏற்பாடு செய்து கொண்டு இவைகளை ஒழுங்காக வைக்கப் போவதாகச் சொன்னார். இவர் International Education Year Award For Distinguished Personalities என்ற தலைப்பில் Ideal Educationist என்ற பாராட்டையும் பரிசையும் பெற்றிருக்கிறார். 27–6–70 அன்று தமிழ் நாடு முதல் அமைச்சர் திரு மு. கருணாநிதி அவர்கள் பரிசு வழங்கியிருக்கிறார்.

திரு முத்துக்குமாரசாமியைப் போன்ற உழைப்பாளியை நாம் காண்பது அரிது. பள்ளிக்கூட வேலை இல்லாத நேரங்களில் இரவு எந்நேரமும் அயராது உழைக்கிறார்.

அவரது ஓய்வு நேரங்களில் 31,470 அரிய கருத்துக்களைப் பல அறிஞர்களின் நூல்களிலிருந்து தொகுத்து வைத்திருக்கிறார். விஞ்ஞான உண்மைகள், பல நாடுகளைப் பற்றிச் சுவையான விஷயங்கள் ஆகியவற்றை ஐந்நூறு புத்தகங்களிலிருந்து சேகரித்திருக்கிறார். பதினைந்து ஆண்டுகளாக மேற்கொண்ட முயற்சி இது.

மேலும் அவருடைய முயற்சி, உழைப்பு, சேகரிப்பு இவற்றையெல்லாம் கூறிக்கொண்டே போவதானால் கட்டுரை மிகவும் நீண்டுவிடும். அவர் சேகரித்து வைத்திருக்கும் அறிவியல் கண்காட்சிப் பொருள்களையெல்லாம் பார்வையிட்டேன். எல்லாப் பள்ளிக்கூடங்களும் இச்சங்கத்துக்கு எழுதி மேற்படி கண்காட்சியைத் தங்கள் பள்ளியில் வைக்கச் சொல்லிப் பயன் பெறலாம்.

இளைஞர் சமுதாயத்தை நடத்திச் செல்ல வேண்டிய உபாத்தியாயர்களுக்கே வழிகாட்டும் வாலாஜாபாத் யுனெஸ்கோ ஆசிரியர்கள் சங்கம் மிக மிக உயர்வான நல்லதொரு இயக்கம்.

—ஸோமாஸ்

# வட்டமேஜை

தமிழ் நாட்டில் நடந்து வரும் தி. மு. கழக ஆட்சி ஜனநாயக லட்சியங்களுக்கு விரோதமாகவும் சுதந்திர உணர்ச்சிகளை மட்டந்தட்டும் முறையிலும் எதேச்சாதிகாரமாக நடந்து வருகிறது. அரசாங்க நிருவாகத்தில் தி. மு. கழகத்தவர்கள் அநாவசியமாகத் தலையிட்டு அதிகாரிகளையும் நிர்ப்பந்தப்படுத்தி நிர்வாகச் சீர்கேடுகளை ஏற்படுத்தி வருகின்றனர். லஞ்சம் ஊழல் ஆகியவைகளும் நாளுக்கு நாள் அதிகப்பட்டுக் கொண்டே யிருக்கின்றன. இதனால் நாட்டின் பொதுநலனும் மக்கள் நலனும் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. தி. மு. க. ஆட்சியாளரின் முறைகேடான செயல்முறைகளை மக்கள் சிறுகச் சிறுக உணர்ந்துகொண்டிருந்த போதிலும் மக்கள் இத்தகைய உணர்ச்சியை ஒருமுகப்படுத்தி வெளிப்படுத்தவில்லை.

இதன் காரணமாக தி. மு. க. ஆட்சியாளர்கள் தங்கள் குற்றங்களை மறைக்க அவ்வப்போது ஏதேனும் உணர்ச்சிகளைத் தூண்டும் செய்திகளை வெளியிட்டு மக்களின் கவனத்தை வேறு பக்கம் திருப்பி விடுகின்றனர். உதாரணமாக மாநில சுயாட்சிக் கோரிக்கை, காவேரி தண்ணீர்ப் பிரச்னை, இந்தி எதிர்ப்பு முதலியவற்றைக் கிளறி மக்கள் கவனத்தைத் திருப்பி விடுகின்றனர். மேலும் மக்கள் குறைகளைத் தீர்க்க மனு நீதி நடத்துவதாகவும் புறம்போக்கு நிலம் வழங்குவதாகவும் ஆடம்பரமான பிரசாரங்களைச் செய்து வருகின்றனர். ஆட்சியில் உள்ள தவறுகளைக் கூறும் எதிர்க் கட்சிகள் பேரிலும் தலைவர்கள் பேரிலும் அபாண்டமான அவதூறுகளைப் பேசி அசிங்கப்படுத்தி வருகின்றனர்.

மேற்குறித்த அவல நிலைகளை முறியடிக்க இயலாத நிலையில் தமிழ்நாட்டிலுள்ள ஏனைய கட்சிகள் இருக்கின்றன. இதற்குக் காரணம் தி. மு. க. அல்லாத ஏனைய கட்சிகளிடம் ஒருமுகப்பட்ட குறிக்கோள் இல்லாததே ஆகும். தமிழ்நாட்டில் உள்ள கட்சிகள் அனைத்தும் ஒன்றுசேர்ந்து தி. மு. கழகத்தை எதிர்க்க முயன்றால் நிச்சயமாகத் தி.மு.கழகத்தை முறியடித்துவிட முடியும் என்று நம்புகிறோம். உடனடியாகத் தமிழ்நாட்டிலுள்ள அனைத்துக் கட்சிகளும் ஒன்று சேர்ந்து, தி.மு.க அரசை மத்திய அரசு டிஸ்மிஸ் செய்துவிட்டு மறுதேர்தல் நடத்த வேண்டும் எனக் கோரிப் பொது இயக்கம் நடத்த வேண்டும். இம்முயற்சிகளுக்கு மக்கள் ஆதரவைப் பெறத் 'தமிழ்நாடு மக்கள் நலவுரிமைச் சங்கம்' தயாராக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருப்புக்கோட்டை — சிவலிங்கம், கன்வீனர்,
5–5–72 — தமிழ்நாடு மக்கள் நலவுரிமைச் சங்கம்

